

# சர்வோதயம்

மாத இதழ்







"வளரும் நாடுகளுக்கு
வளர்வதற்குத் தேவையா
எரிபொருள் கைக்கெட்டாத
அளவு விலையேற்றம்
அடைந்து வருகின்றது.
வளர்ச்சியிலும்
வளர்ந்த நாடுகளுக்கும்
வளரும் நாடுகளுக்கும்
இடையே இடைவெளிய
வளர்ந்துகொண்டே
வருகின்றது."

# கிராமங்கள்

அழகுதாசன்

*

அரசியல் வாதிகள்
ஆட்சியில் அமர
ஐந்தாண்டுக்கொருமுறை
எங்களிடம்
ஓடோடி வந்து-
உறவினர் போல
ஒட்டிக் கொள்கிருர்கள்
ஏன் தெரியுமா?
அடுத்து வரும்
தேர்தல் வரை
நாங்கள்
அவர்களின்
சுவரொட்டிகளேயே
சுமந்து நிற்க.

*

தேர்தல்
வரும்போதெல்லாம்
''இந்தியா கிராமங்களில்
வாழ்கிறது'' - என்று
எங்களே
நொடிக்கு நூறு முறை
புகழ்கிருர்கள் —
ஏன் தெரியுமா?
இந்தியாவிலுள்ள
நகரங்கள் எனும்
திமிங்கலங்களின்
ளர்ச்சிக்கு
ங்களேயே
ரி ஆக்கிட.

தல் காலச்

அவர்கள் உதிர்த்த
வாக்குறுதிகள்
எத்தனே தெரியுமா?
ரோடு போட்டுத் தருகிரேம்
பள்ளி கட்டித் தருகிரேம்
கிணறு வெட்டித் தருகிரேம்
என்றெல்லாம் சொன்ஞர்கள்
ஆனல் —
ஆறு ஐந்தாண்டுத்
திட்டங்கள்
தீட்டியும்
எங்களுக்குக் கிடைத்தது
என்ன தெரியுமா?
நிரந்தரமான
ரேசன்கடை மட்டும்தான்.

*

கிராமங்கள் தோறும்
கைத்தொழில் மூலம்
வேலேயில்லாத்
திண்டாட்டத்தையும்
வறுமையையும்
வெளியேற்றுவோம்
என்று
வீதிதோறும் முழங்கிஞர்கள்
ஆனல் —
எங்களேயே
நம்பியிருக்கும்
மக்களுக்குக் கிடைத்தது
என்ன தெரியுமா?
கிராமங்கள் தோறும்
கள்ளுக் கடையும்
சாராயக் கடையும்
ஏலம் எடுத்திட
லேசென்ஸ் மட்டும் தான்.

# அமைதி நிறைந்த புரட்சி!

பேராசிரியர் மைலாஸ் மக்கூரா
இயக்குநர், உலக கருவள ஆய்வு நிறுவனம்

மக்கள் தொகை பெருக்கம் அரசுகளின் கருவூலங்களை நிரப்பு வதற்குப் பெருகிவரும் வரி செலுத்துவோரையும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உழைப்பதற்கு பெருவாரியான தொழிலாளர்களையும், போர் மூண்டால் அரசுகளின் பீரங்கி களுக்கு போதிய அளவு நரபலி அளிப்பதற்கு இராணுவத்தினரை யும் தந்து உதவுகிறது. 1950-ஆம் ஆண்டு வரை உலகில் எந்த அரசும் அதன் மக்கள் தொகையை கட்டுப்படுத்துவதற்கு திட்டவட்ட மான எத்தகைய நடவடிக்கையும் எடுத்தது கிடையாது.

## மனித வரலாற்றில் முக்கியமானதோர் மாற்றம்

இன்று உலக நாடுகளனைத்தி லும் குடும்பக் கட்டுப்பாடு முறை கள் கையாளப்படுகின்றன. உலகெங்கிலும் கருவளம் குறைந்து வருகிறது.

மெக்சிகன் பல்கலைக்கழகத்தின் மக்கள் தொகைக் கட்டுப்பாடு இலாக்காவின் இயக்குநர் பேராசிரியர் கேயில் நெஸ் (Gayl Ness) இதை ''வரலாற்றிலேயே அமைதி நிறைந்த புரட்சியாகவும், ஆனால் மனித வரலாற்றிலேயே மிகவும் குறிப்பிடத்தக்கதோர் புரட்சியாகவும்'' கருதுகிறார்.

## உலகெங்கும் ஜன கணிதை

அந்தப் புரட்சிக்கான புது வெடிமருந்து இவ்வாண்டில் உலகெங்கிலும் நடைபெறும் ஜனகணிதைப் புள்ளி விபரங்கள் அனைத்து அரசுகளின் செயலகங் களிலும் அதிகமாக வருகிறது. புது டெல்லியிலும் ஜனகணிதைப் புள்ளி விபரங்கள் வெளியாக வெளியாக அதிலிருந்து எழும் பிரச்சினைகளை சமாளிப்பதற்கு அரசு அதிகாரிகள் கொள்கைக் குறிப்புகளை தயாரித்து வருகிறார் கள். இந்திய நாட்டின் அனைத்து மாநிலங்களிலும் 15 லட்சம் பேர் மக்கள் தொகையை எண்ணு வோர்கள் வீடுவீடாக சென்று தகவல் சேகரித்து வந்துள்ளார் கள். அனைத்தின் விளைவாக தொகுப்புகளின் கடைசி வரியில் காணும் கூட்டுத்தொகை 68,38,10,051. இது சரியாக 10 ஆண்டுகளுக்கு முன்னர் எடுத்த கணக்கெடுப்பை விட 25% கூடுதலாகும்.

## சீனாவும் தயாராகிறது

இன்று சீன அரசு அடுத்த ஆண்டு, அந்நாட்டில் நடைபெற விருக்கும் ஜனகணிதைக்காக அதன் கணக்கீடு இயந்திரங்களை முடுக்கி சரிசெய்து வருகின்றது. அடுத்த வருடம் உலகிலேயே மிக அதிக மக்களைக் கொண்ட நாடு தம்மை எண்ணிக் கொள்ள எழுந்து நிற்கவிருக்கிறது.

## தகவல்கள் ஏராளம்

மொத்தத்தில் 1980 முதல் 1984-க்குள் மொத்தம் 144

நாடுகள் (சென்ஸஸ்) ஜனகணிதை நடத்த இருக்கின்றன. அவற்றில் 125 நாடுகள் இவ்வாண்டு முடிவடைவதற்குள் தமது மக்கள் தொகையை எண்ணி முடித்திருக்கும். அவைகளில் பெரும்பாலான நாடுகளுக்கு ஐக்கிய நாட்டு சபையின் மக்கள் தொகை நடவடிக்கைகளுக்கான நிதி (U. N. Fund for Population Activities) உதவியளித்திருக்கிறது. இந்நிதி சென்ற 10 வருட காலத்தில் மொத்தமாக 7.5 கோடி டாலர் (ரூ. 60 கோடி) வளரும் நாடுகளின் ஜனத்தொகை பற்றிய தகவல்கள் சேகரிப்பதற்கே செலவழித்திருக்கிறது.

### ஓடிக் கொண்டிருக்கும் திரைப்படத்திலிருந்து புகைப்படம்

இப்படித் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஜன கணிதை ஒரு வகையில் ஓடிக் கொண்டிருக்கும் ஒரு திரைப்படக் காட்சியிலிருந்து ஒரு காட்சியை புகைப்படம் எடுப்பது போன்றதாகும். கடைசி ஜன கணிதைக்கான அட்டவணை தயாராகும் பொழுது அந்த போட்டோ-புகைப்படம் எடுக்கப்படுகிறது. அந்தக் காட்சியின் முக்கிய அம்சங்கள் இப்பொழுதே தெளிவடைந்து வருகிறது.

### இன்றுள்ள உலகம்

இன்று உலக ஜனத்தொகை ஏறத்தாழ 440 கோடியாக இருக்கிறது. அவர்களில் ஏறத்தாழ 31% தென் ஆசிய நாடுகளில் வாழ்கின்றனர். 27% மக்கள், கிழக்கு ஆசியாவில் வாழ்ந்து வருகிறார்கள். 11% மக்கள் ஆப்பிரிக்கா பூகண்டத்தில் வாழ்கின்றனர். 10% ஐரோப்பாவிலும் 9% லத்தின் அமெரிக்க நாடுகளிலும் 6% சோவியத்து அகிலத்திலும், மற்றொரு 6% வட அமெரிக்காவிலும் வாழ்ந்து வருகின்றனர்.

வருங்கால மனித வரலாற்றுக்கு திறவுகோல் இந்த மக்கள் தொகை எந்த விகிதத்தில் ஆண்டுதோறும் வளர்கிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. கடைசியாக ஐக்கிய நாட்டு சபை அளித்துள்ள தகவல்கள்படி இந்த வளர்ச்சி தற்சமயம் ஆண்டொன்றுக்கு 1.73% வளர்ந்து வருகிறது என்றும், அது நாளுக்கு நாள் குறைந்து வருகிறது என்றும் கூறுகிறது.

### வருங்கால உலகம்

இந்தப் போக்கை இன்று உள்ள ஜனத்தொகை மீது பதித்த பின் கணக்கிடுவோமாகில், இந்த நூற்றாண்டு முடியும் பொழுது உலக மக்கள்தொகை 600 கோடியெனவும், 2110-ஆம் ஆண்டில் 1050 கோடியெனவும் விடை கிடைக்கின்றது. கி. பி. 2110-ஆம் ஆண்டில் மக்கள் தொகை வளரா நிலை அடைந்து விடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த உலகப் போக்கில் மக்கள் தொகை, வளர்ந்த நாடுகளில் வளரும் வேகத்தைவிட இருமடங்கு வேகமாக வளரும் நாடுகளில் நடைபெற்று வருகிறது. இப்படி மக்கள் பெருக்கு ஏற்பட்டுவருவதின் விளைவாக இறுதியில் ஆப்பிரிக்கா, ஆசியா இலத்தின் அமெரிக்க நாடுகளில் தான் உலக மக்களில் 90% மக்கள் வாழப் போகிறார்கள் என்பது தெளிவு.

## வங்கியில் டிபாசிட் செய்துள்ள தொகைக்கு வட்டி போன்றது

மக்கள்தொகை வங்கியில் டிபாசிட் செய்திருக்கும் பணம் போன்றது. இன்று டிபாசிட் தொகைக்குத் தரப்படும் வட்டி விகிதத்தில் ஒரு சிறுமாறுதல் செய்தால் இறுதியில் மொத்த தொகைக்குக் கட்டும் மொத்த வட்டி பெருமளவு பாதிக்கும். எனவே ஆண்டுதோறும் வளர்ந்து வரும் மக்கள் தொகையின் விகிதம் எந்த விகிதத்தில் வளர்கிறது என்பதைப் பொறுத்து உலக மக்கள் மிகவும் குறைவாக வளர்ந்தால் 800 கோடியாகவும், குறையாமலே தற்சமயம் வளரும் விகிதத்திலேயே வளருமாகில் 1450 கோடியாகவும் இருத்தல் கூடும்.

## ஐ. நா. சபை எதிர்பார்ப்பது

எனவே ஐக்கிய நாட்டு சபை எதிர்பார்க்கிறபடி அல்லது விரும்புகிறபடி, இந்த மக்கள் தொகை வளர்ச்சி ஒரு நடுநிலை நிதானத்தில் நடைபெற வேண்டுமானல் 2110-ஆம் ஆண்டில் 1050 கோடி மக்களுடையதோர் உலகில் மக்கள் தொகை வளரா நிலையடைய வேண்டுமானல் உலக நாடுகள் அடுத்த சில 10 ஆண்டுகளில் கடைபிடிக்க வேண்டிய மக்கள் தொகைப் பெருக்க கொள்கைகளையும் பிறப்பு இறப்பு கட்டுப்பாடுகளையும் பொறுத்திருக்கிறது.

## "உலக நிறுவனம் செய்யும் வேலை"

இந்தக் கொள்கைகளை இன்று ''உலக கருவள ஆய்வு (World Fertility Survey) செய்து வருகிறது. இந்த ஆய்வுகள் சென்ற 10 ஆண்டு கால பெரு முயற்சியின் பயனாக இப்பொழுது முடிவடைந்து வருகிறது. நாளது வரை 61 நாடுகளின் ஆய்வு முடிந்து விட்டது. 3,50,000 திருமணமான, மக்கட்பேறு பருவத்திலிருக்கும் பெண்களை சந்தித்து அவர்களது எண்ணங்களை தெரிந்து கொண்டாகி விட்டது. மொத்தம் 4 கோடி டாலர் (32 கோடி ரூபாய்) செலவில் செய்யப்படும் இந்த ஆய்வுகளே நாளது வரை உலகிலேயே மனித இனப் பெருக்க இயல் பற்றி நடத்தப்பட்டிருக்கும் மிகப்பெரிய கணக்கெடுப்பாகும்.

## உலகெங்கிலும் கட்டுப்பாடுகளை விரும்புகின்றனர்

அண்மையில் பல்வேறு நாடுகள் தமது மக்கள் தொகை பற்றிய கொள்கைகளை மாற்றி வந்துள்ளதற்கு எடுத்துக்காட்டாகவே தற்சமயம் கைக்குக் கிடைத்துள்ள தகவல்களைக் கருத வேண்டும். ''கருத்தடைக் கருவிகள் உலகெங்கிலும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது என்பதற்கு பல நாடுகளிலிருந்து சான்றுகள் கிடைத்துள்ளன. இது ஒரு புரட்சிகரமான மாற்றம். உலக கருவள ஆய்வின் ஒரு திறன்மிக்க ஆய்வாளர் திரு. என்ரிக் கராஸ்கோ (Mr. Enrique Carrasque) இவ்வாறு கூறினர்.

## கட்டுப்பாடுகளை விரும்புவோர்

சென்ற 10 ஆண்டு காலத்தில் 15 முதல் 49 வயது வரையான பெண்களில் திருமணமானவர்கள் கருத்தடை முறைகளை பயன்படுத்துவோர் 14% ஆக இருந்தவர்கள் 48% ஆக தாய்லாந்தில் அதி

**இரண்டுக்கு மேல்............**

கெட்டேன்
பெரிய மனிதனின்
பேச்சைக் கேட்டுக்
கெட்டேன் கெட்டேன்
இப்போது
சீனிக்கொன்று
சீமை
எண்ணெய்க்கொன்று
மைதா
மாவுக்கொன்று
எருமைப் பாலுக்கொன்று
புழுத்த
அரிசிக்கொன்று
என்று
ஐந்துக்கு மேலே
வேண்டாமே!
இரண்டுக்கு மேலே
இல்லையே!

— மீரா

கரித்துள்ளனர். இந்தியாவில் இவர்கள் 8% லிருந்து 23% ஆக அதிகரித்திருக்கின்றனர். மலேசியாவில் 9% லிருந்து 34% ஆக அதிகரித்துள்ளனர். மெக்சிகோவில் 13% லிருந்து 40% ஆக அதிகரித்துள்ளார்கள்! உலக ''கருவள ஆய்வு'' தகவல்களை சேகரித்து வெளியிடப்பட்டிருக்கும் 20 வளரும் நாடுகளில் சோதனை செய்த பெண்களில் 40% பெண்கள் ஏதாவதொரு முறை அறிவியல் சார்ந்த கருத்தடை முறைகளைக் கையாண்டு வருகிறார்கள். ஆனால் இந்த நிறுவனம் கருத்தடை முறைகள் நாளுக்கு நாள் கூடுதல் பயன்படுத்தப்படுகிறது என்று கூறுவதுடன் நின்று விடவில்லை. இவைகளைப் பயன்படுத்தாது இருந்தது காரணிகளான இடைவெளிகளை பற்றியும் தகவல்கள் சேகரித்து வருகிறது.

### ஏழு வருடங்களாகியும் உதவிகள் கிட்டாது தவிக்கின்றனர்

ஏழு வருடங்களுக்கு முன் புக்காரெஸ்டில் நடந்த உலக ஜனத்தொகை மாநாடு உலகில் மணவாழ்க்கை நடத்தும் அனைத்து தம்பதிகளுக்கும் தங்கள் குடும்பத்தை கட்டுப்படுத்துவதற்குரிய அறிவும், ஆற்றலும், முறைகளும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று முடிவு செய்து உலகினுக்கு அறிவித்தது. ஆயினும் ''உலக கருவள ஆய்வின்'' தகவல்கள் இப்பொழுது தெளிவு படுத்துவது யாதெனில் ''உலகப் பெண்களில் சரிபாதி பேர்கள் மேன்மேலும் குழந்தைகள் வேண்டுமென்று விரும்பவில்லை. ஆனால் அப்படி விரும்பாத பெண்களில் சரிபாதி பேர்களுக்குத்தான் குடும்பக் கட்டுப்பாடு முறைகள் கிடைக்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கு உதவிகளே கிட்டவில்லை!''

### வேண்டாத குழந்தைகள்

மூன்றுவது உலக மாதர்களில் மூன்றில் ஒரு பங்கு மாதர்கள் தமது கடைசி மகப்பேறு வேண்டாத பிள்ளையாகவே கருதுகின்றனர். நான்கில் ஒரு பெண் தாம் விரும்பிய குடும்ப அளவு, தமக்கு இருக்கும் குடும்ப அளவை விட குறைவு என்பதையும் தயக்கமின்றி வெளியிட்டார்கள்.

இத் தகவல்களிலிருந்து நாம் ஒரு முடிவுக்கு வருவோமாகில், பெண்கள் விரும்பாத குழந்தைகளை பெற்றெடுக்க கட்டாயப் படுத்தப்படாமல் மட்டும் இருந்

6–ஆம் பக்கம் பார்க்க

# தர்மம் - ஒரு பொருளாதார கண்ணேட்டம்

— *பேராசிரியர் மா. பா. குருசாமி*, எம். ஏ., எம். லிட்.

"அறஞ் செய விரும்பு", "ஐயம் இட்டு உண்", என்பவை நமது முன்னேர் நமக்குச் சொல்லி வைத்த அறவுரைகள். எல்லாச் சமயங்களும் தர்மம்-அறம்-செய்ய வேண்டுமென்பதை வலியுறுத்து கின்றன.

வாழ நெறி வகுத்த வான் புகழ் வள்ளுவர் "ஈத்துவக்கும் இன்பம்" பற்றிக் கூறுகின்ருர். "வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை" எனக் கூறி,

"அற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி",

என்று "பசி ஆற்றுதலே" தர்மங்களில் தலை சிறந்தது என்று வலியுறுத்துகின்ருர்.

"மனத்துக் கண் மாசிலன் ஆதல் அறம்" என்ற தெளிவு இருந்த போதிலும், அன்று தொட்டு இன்றுவரை "ஈதல் அறம்" என்ற கருத்தின் அடிப்படையில், அறத்தின் வெளிப்பாடாக ஏழை எளியவர்களின் துயர் தீர்க்கப் பொருள் கொடுப்பதையே அறமாகக் கருதுகின்ருேம்.

### பழம் பொருள்

மிகப் பழங்காலத்தில் சிறு சிறு சமுதாயமாக மக்கள் வாழ்ந்த காலத்தில், வேள்ாண்மையைச் சார்ந்திருந்த சமுதாயப் பொருளாதார அமைப்பில் உழைக்க வாய்ப்பும், உழைப்பவர்களுக்கு உண்ண உணவும் கிடைத்துக் கொண்டிருந்தது. அந்நிலையில் உழைக்க முடியாத நிலையில் வாழ்ந்த உடல் ஊனமுற்ருேரும், நோய்வாய்ப் பட்டோரும் மற்றவர்களை நம்பி வாழ வேண்டியிருந்தது. வேறு வழியற்ற நிலையில் அவர்கள் பிச்சை எடுத்து வாழ்ந்தனர். "இரந்தும் உயிர் வாழ்கின்ற" நிலையை உயர்ந்ததாக என்றும் யாரும் கருதியதில்லை.

வாழ வருவாயற்றவர்களுக்குப் பிச்சை போட வேண்டுமென்று எல்லாச் சமயங்களும் வற்புறுத்தின. இது நாளடைவில் "பிச்சை போடுவது மட்டுமே தர்மம்" என்று பலரை மயங்க வைத்து விட்டது.

### மாறிய சூழல்

காலப்போக்கில் பொருளாதார அமைப்பில் மாற்றம் ஏற்பட்டது. இதனுல் இருப்பவர்கள்-இல்லாதவர்கள் என்னும் வேறுபாடு பெருகியது. வேலை செய்ய இயலாதவர்கள் மட்டுமின்றி, வேலை கிடைக்காதவர்களும் பிச்சை எடுக்கின்ற சூழ்நிலை தோன்றியது.

தர்மத்தைச் செய்தவர்கள் இருவகைகளாகச் செய்தனர். ஒன்று தனிமனிதர்களின் தொல்லைகளையும் துயர்களையும் தீர்க்கும்

4-ஆம் பக்கத் தொடர்ச்சி

தால் இந்நாடுகளின் பிறப்பு விகிதங்களை 25% குறைத்தும் பல நாடுகளின் பிறப்பு விகிதங்களை 40% வரை குறைத்துமிடலாம்.

குடும்பக் கட்டுப்பாடும், கருவள விகிதத்தை குறைத்தலும் பொருளாதார வளர்ச்சியின் அம்சங்களே! ●●

---

வகையில் உணவோ, பொருளோ கொடுத்து உதவினர். மற்றொன்று, சமுதாயத்திற்கு நன்மை செய்வதை அறமாகக் கொண்டு சாலைகள், மருத்துவ நிலையங்கள், கல்விக் கூடங்கள் அமைத்தல் ஆகியவற்றை மேற்கொண்டனர்.

மகாகவி பாரதியார் நமது காலச் சூழ்நிலைக்கேற்ப அறங்களைப் பட்டியல் போட்டுக் காட்டுகின்றார். அவர்,

''இன்ன றுங்கனிச் சோலைகள்
செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள்
இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம்
வைத்தல்
ஆலயம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர
நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம்
கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி
வித்தல்'',

என்று கூறி, மரபு வழித் தருமங்களை விட கல்விக்கண் வழங்குதல் சிறந்ததென வலியுறுத்துகின்றார்.

ஒரு காலத்தில் பசித்தவனுக்குச் சோறு போடுவது தர்மமாக இருந்தது. மகாகவி பாரதியார் கல்வியின் மூலம் வாழவழி காட்டுவதைத் தருமம் என்கின்றார்.

இன்றைய இந்தியச் சூழ்நிலை பழங்காலச் சூழலிலிருந்து முற்றிலும் மாறிவிட்டது. இந்நிலையில் அறத்திற்குப் பழைய பொருளைக் கூறிக் கொண்டிருப்பது பொருத்தமாகாது. இன்றைய மனிதத் தேவை உணவு மட்டுமல்ல. ஆதலால் புதிய நோக்கில் தருமத்தை அணுக வேண்டும்.

## 'பிச்சை'த் தருமத்தின் முறைகள்

பிச்சை போடுதலைத் தருமமாகக் கருதிய முன்னோர்கள் அதன் நன்மைகளை-சிறப்புகளை மட்டுமே எண்ணிப்பார்த்தனர். பிறர் துயர் தீர்க்கப் பணம் கொடுப்பவரிடம் பொருள் பற்றுக் குறையுமென்று கருதினர். பசியைத் தனி மனிதர்களுக்கு வருகின்ற 'பிணி'யாக-நோயாக எண்ணிப் பார்த்தார்களே தவிர, அதனைச் சமுதாய-பொருளாதார சீர்கேடாகக் கருதவில்லை. ஆதலால் பசித்திருப்போருக்குப் புசிக்கத் தருவோரை 'பசிப்பிணி மருத்துவராகப்' போற்றி மகிழ்ந்தனர்.

தருமம் கோவில்களைச் சுற்றிச் செய்யப்படுவதால் கோவில்களைச் சுற்றிப் பிச்சைக்காரர்கள் அணிவகுக்கத் தொடங்கினர். உழைக்க இயலாத நோயாளிகளும், முதியவர்களும் மட்டுமின்றி உழைக்க அஞ்சிய சோம்பேறிகளும் பிச்சை எடுத்து வாழத் தொடங்கினர். இன்று நாட்டில் பிச்சை எடுப்பதைத் தொழிலாகக் கொண்டவர்களின்

எண்ணிக்கை பெருகுவதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

பிச்சை வாங்கிப் பிழைப்பவர்கள் தன்மான உணர்ச்சியை இழக்கின்றனர். 'வாழும் முறைமையைப்' பற்றிய சிந்தனை இன்மையால் எத்தகைய தவறுகளையும் தயங்காது செய்பவர்களாகச் சிலர் மாறுகின்றனர். இத்தகைய சமுதாயக் குற்றவாளிகளை உருவாக்க பிச்சை காரணமாகின்றது.

நோயாளிகளாக இருக்கும் பிச்சைக்காரர்களுக்கு அரசு இல்லங்களை அமைத்து வாழ்வளிக்கலாம். அப்படியில்லாமல் அவர்கள் பல இடங்களிலும் சுற்றிப் பிச்சை எடுக்கின்ற பொழுது நோய்கள் பரவ அவர்கள் காரணமாகின்றனர். ஆதலால் இன்றையச் சூழ்நிலையில் 'பிச்சை' போடுவதை நாம் தர்மமாக ஏற்றுக் கொள்ள முடியாது.

## புது விளக்கம்

தர்மம் என்ற சொல்லுக்கு காலச் சூழ்நிலைக்கேற்ப விளக்கம் தருவது தேவையாகும். இந்த நோக்கில்தான் மகாகவி பாரதியார் ''எல்லாத் தர்மங்களிலும் சிறந்தது ஏழை ஒருவனுக்கு எழுத்தறிவித்தல்'' என்று கூறுகின்றார்.

தர்மம் - அறம் - செய்தல் என்பது ஒன்றை அடைவதற்குரிய கருவியாக - வழிமுறையாக இருக்கின்றது. ஆன்மீக மேம்பாடுதான் நோக்கம். செய்கின்ற அறம் அதற்குரிய நிலைக்கு நம்மை உயர்த்த வேண்டும். அதாவது, நமது மனத்தைத் தூய்மைப் படுத்தி மேம்படுத்த வேண்டும்.

அறம் என்பது வாழ்க்கை முறையின் ஒரு கூறாக அமைய வேண்டும். நமது செயல்களில் அறம் வெளிப்பட வேண்டும்.

மற்றவர்களுக்குத் தீங்கு செய்யாமல் இருப்பதும் ஒருவகைத் தர்மம்தான். ஆனால் இது எதிர்மறைத் தருமம். உடன்பாட்டு முறையில் தர்மம் என்பது மற்றவர்களுக்குத் துணை செய்வதாக இருக்க வேண்டும்.

''நாமும் வாழ வேண்டும்; மற்றவர்களும் வாழத் துணை செய்ய வேண்டும்'' என்று எண்ணிச் செயல்படுகின்ற பொழுது தனி மனித அறம் சமுதாய ஒருமைப்பாட்டிற்கும், வளர்ச்சிக்கும் துணை செய்வதாக இருக்க வேண்டும்.

## காந்தியக் கண்ணோட்டம்

காந்தியடிகள் அறம்-தர்மம்-என்பது தனி மனித வாழ்க்கைக்கும் சமுதாய வாழ்க்கைக்கும் அடிப்படையாக இருக்க வேண்டுமென்று கருதினார். ஆதலால் விரிந்த அளவில் பொருள் கொண்டார்.

தனி மனித வாழ்விலும், சமுதாய நடவடிக்கைகளிலும் அறம் இருக்க வேண்டுமென்று கருதுகின்ற பலர், அரசியல் வாழ்க்கையிலும், பொருளாதார வாழ்க்கையிலும் 'எப்படியும் வாழலாம்' என்று கருதி அறத்தைப் பலியிடுகின்றனர். இந்தப் போக்கினை காந்தியடிகள் ஏற்கவில்லை.

இன்றையப் பொருளாதார உலகில் போட்டியும், சுரண்டலும் மிகுதியாக இருக்கின்றன. ஆதாயம் கருதிப் பல வழிமுறை

களையும் பின்பற்றுகின்றனர். இத ஞல் சமுதாயத்தில் அமைதி இல்லை.

முதலாளிகளிடம் தொழிலா ளர்களுக்குக் கூலி குறைவாகக் கொடுத்து மிகுதியாக ஆதாயம் பெற வேண்டுமென்ற நோக்கம் இருக்கின்றது. தொழிலாளர்களி டம் குறைவாக உழைத்து மிகுதி யாக ஊதியம் பெற வேண்டு மென்ற விழைவு இருக்கின்றது. இதனுல் 'வர்க்கப் போராட்டம்' என்கின்ற முதலாளி - தொழிலாளி சண்டை வருகின்றது.

காந்தியடிகள் அறக் கருத்தைப் பொருளாதாரத்தில் புகுத்த முயன்ருர். அதன் மூலம் அமைதியான அறவழிச் சமு தாயத்தை அமைக்க விரும்பினுர். அதற்காக அவர் வழங்கிய தத்துவம்தான் தர்மகர்த்தாக் கொள்கை.

தர்மகர்த்தாத் தத்துவம் செல்வர்களுக்குத் தர்மம் பற்றிய புதிய கருத்தை வழங்குகின்றது. ஒரு செல்வர் தன்னிடமிருக்கும் பணத்தைத் தர வேண்டும் என்ப தில்லை. அவர் அதனைப் பொதுநல நோக்கில் நிர்வகிக்கின்ற பொழுது தர்மகர்த்தாவாகின்ருர். அவருடைய நடவடிக்கைகள் அற நடவடிக்கைகளாக இருக்கும்.

ஒருவர் ஆயிரம் ரூபாயைச் சில்லறை மாற்றி ஏழை எளியவர் களுக்குப் பிச்சை போடுவதைவிட, இருக்கின்ற மூலதனத்தால் தொழில்களை அமைத்து வேலை வாய்ப்பளிப்பது பெரிய அறச் செயலாகும்.

நல்ல தர்மகர்த்தாவாக இருப்பவர் ஆதாய நோக்கத் தோடு தொழில் நடத்தாமல் சமுதாய நல நோக்கத்தில் தொழிலை நடத்துவார். கலப் படம் போன்ற தவறுகளைச் செய்ய மாட்டார். தொழிலாளர்களைத் தொழில் பங்காளிகளாக நடத்து வாரே தவிர, கொத்தடிமை களாகக் கருதிச் சுரண்ட மாட்டார்.

தர்மகர்த்தா முறை அறத்தை அடிப்படையாகக் கொண்ட முறை யாதலால் இன்றையச் சிக்கல்கள் பலவற்றிற்கு இது தீர்ப்பளிக்கக் கூடியதாக இருக்கும்.

### கொடை இயக்கம்

அறவழிச் சமுதாயத்தை அமைக்க விரும்பிய அற முனிவர் வினேபா தர்மத்திற்கு-தானத் திற்கு-புதிய விளக்கம் தந்து புரட்சி செய்ததை உலகு அறியும். 'பூமிதானம்' (நிலக் கொடை) என்று தொடங்கி, ஊதியத்தில் ஒரு பகுதியைத்தருகின்ற 'சம்பத் தானம்', இருக்கின்ற அறிவைச் சமுதாயத்திற்கு வழங்குகின்ற 'புத்திதானம்', 'கிராம தானம்' என்று வெவ்வேறு துறைகளிலும் அறத்தை நுழைத்ததை எண்ணிப் பார்த்தால் அறத்தின் பொருள் விளங்கும்.

ஒவ்வொருவரிடமும் ஏதா வது ஒன்று, செல்வமோ, செயல் திறனே, அன்பாற்றலோ மிகுதி யாகக் குவிந்திருக்கின்றது. அதனைத் தேவையானவர்களுக்கு வழங்குதல் மூலம் சமச்சீரான வளர்ச்சியுடைய சமுதாயத்தை உருவாக்க முடியும்.

### கூட்டு அறம்

தனி மனிதர்கள் செய்கின்ற அறத்தை விட சமுதாயத்திலுள்ள

மக்கள் இணைந்து கூட்டாகச் செய்கின்ற அறம் மிகுந்த பலன் தருமென்று நம்பினர்கள். இதனுல் தான் கோவில்களை அறநிலையங்களாக மாற்றினர்.

கோவில் உண்டியல்களில் ஒவ்வொருவரும் தங்களது வளத்திற்கேற்ப காசையும் பணத்தையும் போடுகின்றனர். ஒருவரிடம் இருக்கின்ற ஐந்து காசால் ஒருவரின் பசியைத் தீர்க்க முடியாது. மாருக ஆயிரக்கணக்கானவர்கள் போடுகின்ற ஐந்து காசுகள் மொத்தமாகச் சேர்ந்து பலரின் பசிப்பிணியைப் போக்குவதனைக் காணலாம்.

இன்றைய நிலையில் கூட்டு அறமும் எதிர்பார்க்கும் வகையில் பயன் தரவில்லை. இந்துக் கோவில்களின் உண்டியல்களில் சேர்கின்ற பணத்தில் பெரும் பகுதி நிர்வாகச் செலவிற்குச் செல்கின்றது. இதனுல் அறஞ் செய்யப் பயன்பட வேண்டிய பணம் ஆட்சி செய்யப் பயன்படுவதைக் காண்கின்ரேம்.

கோவில்கள் சிறந்த அறநிலையங்களாகத் திகழவேண்டுமானுல், அன்ன சத்திரங்கள் நடத்துவதோடு கூட நிலையான அடிப்படையில் வாழ்வளிக்க தொழிற்சாலைகளை நடத்தலாம். கோவில்கள் சோம்பேறிகளின் கூடாரமாக இருக்காமல் தேனீக்களின் குடியிருப்பாக மாற வேண்டும்.

### அற நோக்கு

அறம் என்பது அன்பின் அடிப்படையில் அமைய வேண்டும். இது உணர்வில் கலந்து நமது ஒவ்வொரு செயலிலும் வெளிப்பட வேண்டும்.

தனி மனித வாழ்வில் அறம் வெளிப்படுகின்ற பொழுது தான் சமுதாயத்தில் அறம் கோலோச்சும். அறம்மேலோங்கிய நிலையில் மறத்திற்கு இடமில்லை. வன்முறைக்கு வழியில்லை. எல்லோரும் இன்புற்று வாழும் ஒப்பற்ற சமுதாயம் உருவாகும். ● ●

## காக்கி உடுப்பு : பெண்களுக்கு 'பேஷன்' ஆகிறது

பிரிட்டிஷ் பெண்களிடையே இப்போது ஒரு புதுவிதமான நாகரிகம் பரவி வருகிறது. காக்கி உடுப்பை அணிந்து கொள்வதை ஒரு 'பேஷனுக' அவர்கள் கருதுகிருர்களாம்.

பிரிட்டிஷ் ராணுவத்தில் (தரைப்படையிலும் விமானப் படையிலும்) இன்று 13,000 பெண்கள் இருக்கிருர்கள்.

அமெரிக்க ராணுவத்தில் ஒன்றரை இலட்சம் பெண்கள் இருக்கிருர்கள். அமெரிக்காவில் பலவித நாகரிக 'மஞ்சுகள்' உண்டு. அந்த முறையில், ராணுவ காக்கி உடுப்பை அமெரிக்கப் பெண்கள் விரும்புகிருர்கள். இந்த நாகரிகம் இப்போது பிரிட்டனிலும் பரவி இருக்கிறது.

பொதுவாக அரசியல், ராணுவ காரியங்களில் அமெரிக்க பாணியை பிரிட்டிஷ் அரசாங்கம் பின்பற்றி வருகிறது. இந்தச் சூழ்நிலையில், அமெரிக்க காக்கி உடுப்பு நாகரிகம் பிரிட்டிஷ் பெண்களிடமும் பரவத் தொடங்கி இருக்கிறது.

இந்த இரண்டும் சேர்ந்ததால், பிரிட்டிஷ் ராணுவத்தில் பெண்கள் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

# பாபர் பாதுஷா தனயனுக்கு எழுதிய இறுதிக்கடிதம்

மொகலாய மன்னன் பாபர் தனது தனயன் ஹுமாயூன் பெயரால் எழுதியிருந்ததோர் கடிதம் அண்மையில் போபாலில் கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. அதை அவரது இறுதி விருப்பப் பத்திரமாகக் கருதப்பட்டு பாதுகாப்புடன் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த கடிதம் பாரதீய வித்யா பவன் வெளியிட்டுள்ள ''இந்திய வரலாற்றின் ஆன்மா'' (The Soul of Indian History) எனும் நூல் பரத்ராம் சர்மா அவர்களால் எழுதப் பெற்றிருப்பதில் 154-ஆம் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டது. பாபர் பாதுஷாவின் இந்தக் கடிதம் மொகலாய மன்னர்களின் இந்நாட்டின்பாலிருந்த மரியாதைக்கும், மதிப்புக்கும் ஒரு அடையாளம். கடிதம் கீழ்க்கண்டவாறு இருக்கிறது.

தம்பி என் மகனே! பாரத நாட்டில் பல்வேறு மதங்களை தழுவும் மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். மன்னர்களுக்கெல்லாம் மன்னராகிய இறைவன் உங்களை இத்தகையதோர் நாட்டின் ஆட்சிக்கு தேர்ந்தெடுத்திருப்பது காரணமாக நீங்கள் அவனுக்கு மறவா நன்றி செலுத்த கடமைப்பட்டவர்களாவீர்கள். எனவே பின்வரும் கொள்கைகளை நீங்கள் கடைப்பிடித்தொழுக கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

1) உங்களுடைய மனதில் மத வெறி காரணமாக எழும் வேண்டா வெறுப்புகளை தீண்ட விடாதீர்கள். பாரபட்சமற்ற நீதி நியாயமளிக்க பழகிக் கொள்ளுங்கள். இதை நேர்மையுடன் செய்யும் பொருட்டு மக்களிடையே வெவ்வேறு மதத்தைத் தழுவியிருக்கும் மக்களின் மதாச்சாரங்களையும், நம்பிக்கைகளையும் நன்கு தெரிந்து கொள்ளுங்கள். அவைகள்பால் சரியான மரியாதை காட்டுங்கள்.

2) விசேடமாக ''பசுமாடுகளை'' வதைப்பதிலிருந்து விலகியிருங்கள். இப்படி செய்வீர்களானால் பாரத நாட்டு மக்கள் மனதில் உறுதியாக இடம் பெறுவதற்கு உங்களுக்கு உதவியளிக்கும். நீங்கள் இந்நாட்டு மக்களின் திடமான நம்பிக்கைக்கும், விசுவாசத்துக்கும் அன்புக்கும் பாத்திரமாவீர்கள்.

3) எந்த மக்களின் கோயில்களையும், மத வழிபாடு நடைபெறும் தர்ம தலங்களையும் சேதப்படுத்தாதீர்கள். எப்பொழுதும் நீதியை நாடும் நியாயவான்களாக இருங்கள். இப்படி இருந்தால் அரசருக்கும், மக்களுக்கும் இடையே நிலவும் உறவு இதய பூர்வமானதாயிருக்கும். இதன் விளைவாக நாட்டில் எப்பொழுதும் அமைதி நிலவும். மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள்.

4) இஸ்லாமிய மதம் பிரச்சாரம் செய்ய வாளேந்தி அக்கிரமங்கள் செய்தலை விட அன்பின்

வழியாகவும், பரோபகாரம் மூலமாகவும் நன்ருக நடைபெறும்.

5) முஸ்லீம்களுக்கு இடையிலேயே, ஷியா பிரிவினருக்கும், ஸுன்னி பிரிவினருக்கும் இடையே உள்ள கருத்து வேறுபாடுகளை மறந்து ஒற்றுமையாய் இருங்கள். இல்லையேல், இந்த கருத்து வேறுபாடுகள் காரணமாக இஸ்லாமிய மதமே பலவீனமடையும்.

6) உங்கள் நாட்டு பிரஜையின் வெவ்வேறு தனித் தன்மைகளை (Peculiarities) வருடத்தில் ஏற்படும்காலவேற்றுமைகள்போன்று காணக் கற்றுக் கொள்ளுங்கள். அவைகளால் கிடைக்கும் நன்மைகளை பயன்படுத்திக் கொள்ளுங்கள். இதனுல் உங்கள் அரசியல் ஆற்றல்கள் எத்தகைய குறைபாடுகளுமின்றி சிறப்புடனிருக்கக் காண்பீர்கள்!

நன்றி—மைத்ரி.

## எல்லோருக்கும் வேலை! இரட்டிப்பு ஊதியம்

சோவியத் யூனியனில் வேலையில்லாத் திண்டாட்டம் அறவே ஒழிக்கப்பட்டு விட்டது. இது அண்மையில் நிகழ்ந்த சாதனை அல்ல. கடந்த பல ஆண்டுகளாகவே இருந்து வருகிறது. அதோடு கூட, தொழிலாளர்களின் ஊதியம் படிப்படியாக உயர்ந்து சுமார் இரண்டு மடங்காக இப்போது ஆகியுள்ளது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன், முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாயிற்று. அப்போது வேலையில்லாத் திண்டாட்டம் இருந்தது. கடுமையாக இருந்தது. குறிப்பாக விவசாயத் தொழிலாளர்கள் போதிய வேலை வாய்ப்பு இல்லாமல் கஷ்டப்பட்டார்கள்.

ஆகையால் நகரங்களில் இயந்திரம் சம்பந்தப்பட்ட தொழில்கள் ஏராளமாகத் துவக்கப்பட்டன. விவசாயத் தொழிலாளர்களை, இவற்றில் வேலைக்கு அமர்த்த பயிற்சியும் பிற உதவிகளும் அளிக்கப்பட்டன. இந்த முறையில் ஆண்டுதோறும் 10 லட்சம் கிராம மக்கள், நகரங்களில் தொழிற்சாலைத் தொழிலாளர்களாகக் குடியமர வழி செய்யப்பட்டது.

முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம், 9.000 பெரிய தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன.

இவையன்றி, கிராமங்களில் விவசாயக் குடும்பத்தினர் கூடுதல் வருவாய் பெற ஏராளமான சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள், கைவினைத் தொழில்களுக்கு ஊக்கம் தரப்பட்டது.

இவற்றின் மொத்த பலனுக, இன்று சோவியத் யூனியனில் எவருக்கும் வேலையில்லை என்ற நிலைமையும் இல்லை; எல்லோருடைய வருமானமும் பெருகி இருக்கிறது. சில துறைகளில் வருமானம் ஒன்றரை, மடங்காகவும், சில துறைகளில் 13 மடங்கு அளவுக்குக் கூட அதிகரித்திருக்கிறது. சராசரியாக எடுத்துக் கொண்டால், வருமானம் இரட்டிப்பாகி இருக்கிறது.

# சோவியத்து நாட்டில் பெண்களின் நிலை

புது சோவியத் மாதர்கள்: (The New Soviet Women) ''மாதர்களும் ரஷ்யாவும்'' (Women & Russia) என்று இரு புது புத்தகங்கள் வெளியாகியிருக்கின்றன. இவை இரண்டும் சோவியத் நாட்டில் பெண்கள் நிலை பற்றி விளக்குகின்றன. இவை இரண்டும் பொருளாதார சுதந்திரம் இன்மையே ஆண்களோடு, சரிநிகர் சமானமாக பெண்கள் இருக்கத் தடையாயிருக்கும் ஒரு முக்கிய காரணம் என்று நிலவி வரும் கதையாகும். இது வெறும் கதையே என்பதை நிரூபிக்கின்றன.

### அளவு கடந்த வாய்ப்புகள்

சோவியத் ரஷ்யாவில் மற்றெந்த நாட்டிலும் இல்லாத அளவு பெண்களுக்கு வேலை வாய்ப்புகள் இருக்கின்றன. இவ்வளவு மட்டுமல்ல. நல்ல உயர்ந்த பதவிகளும் கிடைக்கின்றன. இவ்வளவு வசதிகள் மேனாடுகள் எதனிலும் இல்லை. ஆனால் வீட்டில் அவர்கள் நிலை மிக அடிமைத்தனமானதுதான். வீட்டு வேலைகள் அனைத்தும் பெண்களுடைய ஏக போக உரிமை என்ற நிலை அங்கு ஆழமாக வேரூன்றி இருக்கிறது. அதில் ஆண்கள் தலையிடவே கூடாது என்றும் கருதுகிறார்கள். அந்தப் பெண்கள் வெளியே ஆண்களைபோலவே பணிபுரிகிறார்கள் என்பது வேறு விஷயம். இந்த எண்ணம் மற்ற எந்த நாட்டையும்விட ரஷ்யாவில் அதிகமாக பாராட்டப்படுகிறது.

### ஆணவம் தாண்டவமாடுகிறது!

பிற நாடுகளில் ''பெண்கள் விடுதலை'' (Women's Lib) இயக்கம் ஆண்களின் நடத்தையில் ஆணவம் குறைந்து கனிசமான அளவு தணிவான அகந்தையுடன் பழகும்படிசெய்திருக்கிறது. ஆனால் ரஷ்யாவில் ஆண்கள் வீட்டில் மிகுந்த அகம்பாவத்துடன் நடந்து கொள்வார்கள். இது பல சந்தர்ப்பங்களில் வீட்டுக்கு வெளியிலும் வெளிப்படுகிறது. பெண்களுக்கு துணை செல்லும் துணையாளர்கள் கூட அவர் துணைபுரியும் பெண்களைக் கலக்காமலே உணவு விடுதிகளில் உணவுக்கு ஆர்டர் கொடுத்து வருகின்றனர். விரும்பாதவர்கள் தொண்டையில் மது பானத்தை கட்டாயமாக ஊற்றுவார்கள். பால்வழி சலுகைகளுக்காக பெண்களை தொந்திரவு செய்கிறார்கள்.

### பொருளாதார சீர்திருத்தத்தால் மட்டும் மாற்றிட முடியாது

மார்க்ஸின் தத்துவங்களில் மிகவும் பழைமையானவைகளில் ஒன்றும், வைதீக நம்பிக்கைகளில் ஒன்றுமாய் விளங்குவது ''பொருளாதார'' அடிப்படைகளை மாற்றி விட்டால் அதன் மீது எழுப்பப்படும் கருத்துக்களும், அணுகு முறைகளும் தானாகவே மாறிவிடும் என்பதாகும். ஆனால்

இந்த சித்தாந்தம் இன்று சோவியத்து ரஷ்யாவில் பெண்களின் நிலையை உண்மையாக விளக்க பயன்படாதிருப்பதற்குக் காரணம் எதையும் கூறவில்லை.

## தாழ்வுற்று, செல்வம் மிஞ்சிய வாழ்வு

மற்ற அனைத்து மேற்கு நாடுகளைவிட சோவியத்து ரஷ்யாவில் பெண்களுக்கு வேலை வாய்ப்புகள் மிகுதியாக இருக்கிறது. விவாகரத்து, கருச்சிதைவு முதலிய பல பெண்கள் உரிமைகளில் பிற நாட்டினரைக் காட்டிலும் சிறந்த சட்டப் பாதுகாப்புகளையும் அவர்கள் பெற்றிருக்கிறார்கள். குழந்தைகள் பராமரிப்பு வசதிகளையும், சமுதாய உடைச்சலவை வசதிகளையும் எளிதில் பெறும் வாய்ப்பினைகளையும் பெற்றிருக்கின்றார்கள். இந்த நிலை இன்று நேற்றல்ல, பல்லாண்டு காலமாகவே இப்படி இருந்து வருகிறது.

ஆயினும் சோவியத்து நாட்டு பெண்கள் தனிவாழ்வில் பல வகைகளில் அடைபட்டு 'சமத்துவமின்றியே வாழ்ந்து வருகிறார்கள்!!

## உபகாரச் சங்க உறுப்பினர்கள் தலைமறைவு

மேற்கு ஜெர்மானியில் 15 லட்சம் பேர் வேலை வாய்ப்பு இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். இவர்களில் பலர், தங்களுக்கென சங்கம் வைத்திருக்கிறார்கள். இம்மாதிரி 300 சங்கங்கள் உள்ளன.

இச்சங்க உறுப்பினர்கள் என்றால், 'வேலையில்லாத வெற்று நபர்' என்று மற்றவர்கள் நினைக்கக் கூடும் அல்லவா? ஆகையால், பலர் தலைமறைவாக சங்க உறுப்பினர் என்று சொல்லிக் கொள்ளாமல் வாழ்கிறார்கள்.

வேலையிழந்த ஒரு 47-வயது அம்மையார், தெரிந்தவர்கள் மத்தியில் வாழ்வதே கேவலம் என்று கருதி, ஒரு குக்கிராமத்திற்குச் சென்று விட்டார்.

இப்படி, மேற்கு ஜெர்மானியில் பலர் இரு வகையான சங்கடத்தில் சிக்கியிருக்கிறார்கள். வேலையில்லாதது ஒரு கஷ்டம்; அது மற்றவர்களுக்குத் தெரிவதால் 'கேவலம்' வேறு.

இந்த நிலையில் அரசாங்கம் என்ன செய்கிறது? வேலையில்லாதவர்களுக்கு ஏதோ ஓரளவுக்குப் பண உதவி செய்கிறது. "அது, வாழ்வதற்கும் போதாது; சாவதற்கும் போதாது!" என்கிறார் டெடிப்பலேங்கமென் என்ற இளம் ஜெர்மானிய தொழிலாளி. அவர் ஓராண்டுக்கு முன் வேலையிழந்தார். வேலை வாய்ப்பு அலுவலக 'க்யூ' வரிசையில் நின்றிருந்தபோது, அவர் ஒரு பத்திரிகை நிருபரிடம் மேற்கண்டவாறு சலிப்போடு கூறினார். நம் நாட்டில் இந்த க்யூ வரிசையும் இல்லை, இப்படி விசாரிக்க பத்திரிகை நிருபரும் இல்லை!

511

# கடவுளே திருட்டுப் போகிறார்

பொதுவாக கோயில்களில் பாதுகாப்பு பற்றுக்குறை என்று தான் சொல்ல வேண்டும். அவைகளுக்கு பொறுப்பாளர்கள் ஒருக்கால் இறைவன் உறைவிடத்தில் திருடர்கள் தீண்ட மாட்டார்கள் என்ற நம்பிக்கையில் வாழ்ந்து வருகிறார்கள் போலிருக்கிறது. ஆனால் இந்த நம்பிக்கைக்கு இப்பொழுது போதுமான அளவு அதிர்ச்சி ஏற்பட்டிருக்கும் என்று நம்புகிறேன்.

### சில பல திருட்டுகள்

அண்மையில் கோலாப்பூருக்கு அருகாமையில் ஒரு ஜைனர் கோயிலிலிருந்து வெள்ளியினாலான விக்கிரகங்கள் திருடப்பட்டன. சென்ற பிப்ரவரி மாதம் உத்திர பிரதேசத்தில் பஃகர்பூர் (Fakarpur) எனும் ஊரிலிருக்கும் கோயிலிலிருந்து நவலோகங்களால் ஆனதும் சுமார் 300 ஆண்டு பழைமையானதும் சுமார் ரூ. 6 லட்சம் மதிப்புடையதுமான சாமி சிலைகள் களவு போயின. அண்மையில் தஞ்சாவூர் பெரிய கோயிலிலும் திருட்டுப் போயிருக்கிறது. கேரளத்தில் எட்டுமானூர் சிவன் கோயிலிலிருந்து தங்கத்தினாலான சிலை களவாடப்பட்டது. பல வருடங்களுக்கு முன் சிதம்பரத்திற்கு அருகாமையில் சிவபுரியிலிருந்து களவு போன பஞ்சலோக நடராசர் விக்கிரகம் அமெரிக்காவில் பிடிபட்டு திரும்ப வருகையில் இலண்டனில் வெகுகாலம் தங்கியிருக்கிறது. இன்னும் பலபல கோயில்களில் பலபல திருட்டுக்கள் நடந்த வண்ணமிருக்கிறது.

### காவலர்கள் திறம்பட செயல்படுகிறார்கள்

சில நாட்களாக காவலர்கள் விழிப்படைந்து பல கோயில் திருடர்களை கைது செய்து, திருட்டுப் போன பல சிலைகளை பாராட்டத்தக்க முறையில் மீட்டிருக்கின்றனர். அண்மையில் அனைத்துலகிலும் செயல்பட்டு வரும் ஒரு கோயில் திருடர்கள் கும்பலையே ஜம்மு காஷ்மீரில் தகர்த்து அவர்களிடம் இருந்த அபூர்வமான 36 விக்கிரகங்களை காவல்படை மீட்டது. தமிழ்நாட்டிலிருந்து களவுபோனதோர் விலை மதிக்க முடியாத சிலையையும் அவர்கள் மீட்டிருக்கிறார்கள்.

### சுங்க வரி இலாகாவும், பாராட்டுக்குரியது

இதேபோன்று சுங்கவரி இலாகாவும், விழிப்புடனிருந்து, பழைமையான பல புராதனக் கலைப்பொருட்களை அயல் நாடுகளில் விற்பனைக்குக் கள்ளத்தனமாக கடத்திச் செல்லும் வழியில் இடைமறித்து மீட்டு வருகிறார்கள். பம்பாய் சுங்கவரி இலாகாவினர் மட்டும் இப்படி இடைமறித்து மீட்டுள்ள பொருட்களை பாதுகாப்பாக வைப்பதற்குக்கூட இடமில்லாமல் திண்டாடுகிற அளவு செய்திருக்கிறார்கள். ஆனால் சுங்க இலாகாவிலிருந்து இந்தப் பொருட்களை பம்பாய் அரும்பொருட்கள் காட்சி நிலையத்

தினர் பெற்று பாதுகாப்பாக வைப்பதற்கு பெரும் முயற்சி செய்ய வேண்டியிருந்தது. இவை களில் பல வெங்கலம், பல பஞ்ச உலோகம், அருமையான யானைத் தந்தத்தினாலான புராதன கலைப்பொருட்கள். பல மரத்தில் கைவேலை நிறைந்த சிற்பங்கள். இவையனைத்தும் இப்பொழுது மக்கள் பார்வைக்காக காட்சிசாலை யில் அழகாக வைக்கப்பட்டிருக் கிறது. இதுபோலவே சென்னை, டில்லி, கல்கத்தா ஆகிய மாநகரங் களிலும், இவ்வாறு பறிமுதல் செய்யப்பட்ட அருங்கலைப் பொருட்களை காட்சிசாலைகளுக்கு தந்து பாதுகாப்பாக வைத்திருக்க ஏற்பாடு செய்யலாம்.

அதே சமயம் அனைத்து இந்து ஆலயங்களிலும் பாதுகாப்புச் செய்திட ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

●●





## பிரிட்டனில் திடீர் பாலைவனங்கள்

பிரிட்டனில் திடீர் திடீர் என்று புதிய புதிய பாலைவனங்கள் தோன்றுகிறது. ஆச்சரியமாக இருக்கிறதா?

இந்தப் 'பாலைவனங்கள்', தன்மையிலும் புதுமையானவை.

பிரிட்டனில் இப்போது கடுமையான பொருளாதார நெருக்கடி ஏற் பட்டிருக்கிறது. தொழில் துறையில் பெரிய மந்தம். இதனால் சென்ற ஆண்டில் மட்டும் 10 லட்சம் தொழிலாளர்கள் வேலை இழந்தனர். ஏற் கனவே 25 லட்சம் பேர் வேலையின்மையால் அவதிப்பட்டு வருகிறார்கள்.

இரும்பு-உருக்குத் தொழில், கப்பல் கட்டும் தொழில், மோட்டார் தொழில் சம்பந்தப்பட்ட பல தொழிலகங்கள், தொழிற்சாலைகள் மூடப் பட்டு விட்டன. இங்கெல்லாம் வேலை ஏதும் நடக்காததால், 'பாலைவனங் கள்' போல வெறிச்சோடிக் கிடக்கின்றன.

இந்த நிலைமையைத் திருத்தியமைக்க வேண்டும்; மார்கரெட் தாட்சர் அரசு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தொழிலாளர் கள் கோருகிறார்கள். 1930-க்குப் பிறகு, இது போன்ற மோசமான நிலைமை ஏற்பட்டதில்லை என்கிறார்கள். இதற்காக ஏப்ரல் மாதத்தில் பல ஆர்ப்பாட்டங்களும், வேலை நிறுத்தங்களும் நடந்தன.



# மாறு வேடத்தில் இரண்டு அமைச்சர்கள்

முன் அறிவிப்பின்றி அரசு இலாகா எப்படி வேலை செய்கிறது என்று பார்வையிடும் பொருட்டு, மாறு வேடம் பூண்டு குறிப்பிட்ட இடத்திற்கு யாரும் எதிர்பாராத நேரம் வருகை தரும் பழக்கத்தை மகாராஷ்டிர முதலமைச்சர் திரு. ஏ. ஆர். அந்துலே தொடக்கினர். அது இன்று பல துறைகளுக்கும், பல மாநிலங்களுக்கும் பரவியிருக்கிறது. அண்மையில் பம்பாய் மாநகரத் தந்தை (மேயர்) மாநகர அங்கீகாரமின்றி கட்டப்பட்டுள்ள குடிசைப் பகுதிக்குச் சென்று அங்கு ஒரு குடிசையை விலை பேசி வாங்க ஒப்பந்தம் செய்து கொண்டார். பீஹார் மாநிலத் தொழிலாளர் வேலை வாய்ப்பு இலாகாக்களின் அமைச்சர் திரு. ரஞ்சித் சின்ஹா ஒரு படி மேலே சென்ருர். அவர் அரசு நிர்வாகம் செய்து வரும் தொழிலாளர்கள் அரசு சுகாதார பாதுகாப்பு இன்ஷுரன்சு இலாகா வேலை செய்வதை நேர்த்தியாக மாறு வேடம் பூண்டு கண்டு பிடித்துவிட்டார்.

### தொழிலாளியாகச் சென்ற அமைச்சரின் அனுபவம்

அவர் ஒரு சீக்கியத் தொழிலாளி போல் மாறு வேடம் பூண்டு நோய்வாய்ப்பட்ட தொழிலாளர்களுக்கு பெற்றுக் கொள்ளத் தகுதியுள்ள உதவித் தொகையை வாங்குவதற்காக நின்று கொண்டிருந்த ஒரு க்யூ வரிசையில் நின்று கொண்டார். சர்தார் அவர்கள் முறை வந்த பொழுது தொழிலாளர் சுகாதார பாதுகாப்பு இன்ஷுரன்ஸ் அதிகாரி உரிய தொகையில் ஒரு குறிப்பிட்ட விகிதம் பங்கு கேட்டார். அந்த அதிகாரியையும், அவரது இரண்டு உதவியாளர்களையும் அமைச்சர் திரு. சின்ஹா கைது செய்து காவலில் வைக்கச் செய்வதில் வெற்றி பெற்ருர். ஆனல் தொழிலாளர்களுக்குரிய உதவித் தொகையை வாங்கச் செல்லும் பொழுது இத்தகைய முறைகேடுகள் பீஹாரில் மட்டும் நடைபெறுவதில்லை. எங்கும் அவர்கள் லஞ்சம் கொடுக்க நேரிடுகிறது. மாதக் கணக்கில் அவர்களுக்குரிய தொகை கிடைப்பதில்லை.

### காரணங்கள் பல

இந்த நிலைக்கு உரிய முக்கிய காரணங்களில் ஒன்று அண்மையில் சில காலமாக அரசு இந்தத் திட்டத்தை மேன்மேலும் பல துறைகளில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கும் பொருந்தும்படி விரிவாக்கியிருக்கிறது. ஆனல் இவ்வாறு கூடுதல் சேர்க்கப்பட்டிருக்கும் உறுப்பினர் கணக்கை சரிபார்த்து உரிய கணக்குகளை திறம்பட பதிவு செய்யத் தேவையான எழுத்தர்களையும், கணக்கர்களையும் சேர்க்

18–ஆம் பக்கம் பார்க்க

'81 ஜூன் இதழின் தொடர்ச்சியாக

# நிர்வாகிகளுக்கு சுருக்கமாக.....

பேராசிரியர் பீட்டர். எப். டிரக்கர்

172. நாளை வேலை வாய்ப்புகளைத் தோற்றுவித்து வளர்ப்பதற்குத் தேவையான மூலதனம் தருவதே இன்றைய தொழில் இலாபங்கள். அதிக வேலை வாய்ப்புகளும், நாளை தர வேண்டும். இன்றைய வேலைகளைவிட நல்லவைகளும் நாளை தர வேண்டும்.

173. போதிய அளவு மிச்சம் ஏற்படுவது குறைந்த அளவைத் தவிர கூடுதல் அளவல்ல.

174. தொழிலில் தொடர்ந்து நீடிப்பதற்குத் தேவையான தொழில் மிச்சம் எவ்வளவு சேமிக்க வேண்டும். அப்படி தொழிலை நீடிப்பதால் தோன்றும் விளைவுகளை சமாளிப்பதற்கு எவ்வளவு தேவை என்பதை முடிவு செய்வது நிர்வாகத்தின் பொறுப்பு.

175. இலாபம் தொழில் வர்த்தகக் கொள்கைகளை உருக்கொடுக்கின்றன. அரசு நோக்கங்களின் இறுதி இலக்கு இலாபம்.

176. விலையேற்றமும், பண வீக்கமும் ஆதாரமற்ற லாபத்தை அள்ளி அளிக்கும்.

177. ஒரு தொழிலில் ஒன்று மிகுதியான வளர்ச்சி வேகம் இருக்கும்படி செய்யலாம். அல்லது உயர்ந்த இலாபம் இருக்கும்படி செய்யலாம். நீடித்து நடந்து வரும் ஒரு தொழில் அல்லது வர்த்தகத்தில் இரண்டும் ஒரே நேரம் எதிர்பார்க்க முடியாது.

178. இலாபம் ஒரு லட்சியமல்ல, ''அது ஒரு தேவை''. இலாபகரமாக இருத்தல் ஒரு லட்சியம்.

179. ஒரு தொழில் மிக நன்ருக நடைபெற்ருலன்றி நன்மை பயக்காது.

180. இலாபகரமான தொழில் என்ருல் பொறுப்புடன் தொழில் செய்வது அவசியம். திறமையான நிர்வாகமும் அதற்குத் தேவை.

181. ஒரு தொழிலின் தன்மை, நிலைபற்றி முடிவு செய்யப் பயன்படும் ஒரே ஒரு முதன்மையான இலக்கணம் அது இலாபகரமாக நடைபெறுவதற்கான சாத்தியக் கூறுகள்.

182. இலாப நோக்கிற்கு காட்டப்படும் எதிர்ப்பு மட்டும் இருந்தால் சமதர்மமாகிவிடாது.

183. இலாப நோக்கிற்கு எதிர்ப்புத் தெரிவிப்பதால் மட்டும் தொழில் திறனுகி விடாது.

184. இலாபத்தைஒருவருமானமாகக் கருதுவது ஒரு கற்பனை மட்டிலுமே. இலாபத்தை மூல

16-ஆம் பக்கத் தொடர்ச்சி

கப் படவில்லை. எனவே உதவி மானிய கோரிக்கைகள் குவிந்து விடுகிறது. கூடுதல் எழுத்து வேலை குவிந்துவிடுகிறது. இந்த விண்ணப்பங்கள் பெருகி வருகின்றன. ஏராளமான எழுத்து வேலை பாக்கியிருக்கிறது. இந்த எல்லையில்லா எழுத்து வேலைகளை சீர்படுத்தி ஒழுங்காக்கலாம். நிறுவனத்தின் மருத்துவர்கள் ''வெகுமதிகளைப்'' பெறும் பொழுது அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கலாம்!! ●●

---

தனம் சேகரிப்பதற்கான வழியாகவே கருதவேண்டும்.

185. இலாபம் எப்பொழுதும் வருங்காலத்தில் வரக்கூடியது. உற்பத்திச் செலவுகளும், விற்பனை செலவுகளும் இவைகளுக்கான முயற்சிகளும் இலாபத்துக்கு வெகு காலத்துக்கு முன்னரே செய்ய வேண்டியிருக்கிறது.

186. மக்களுக்கு நன்மை செய்வதனைத்தும், உற்பத்தி திறன் பெருக்கத்தாலும், லாபம் கிட்டும் அளவாலும் அளவிடப்பட வேண்டும்.

187. லாபத்தை அளப்பதற்குரிய அளவுகளையும், அதைக் கணக்கிடுவதற்கு கையாளவேண்டிய முறைகளையும் முன் கூட்டியே தெளிவுபடுத்தாமல் லாபத்துக்கு இலக்கணம் கூற முடியாது.

188. பொருளாதார வளர்ச்சிக்கு லாபம் ஒரு கருவியே.

189. பொருளாதார வளர்ச்சிக்கு இலாபம் ஒரு துணை.

190. பொருளாதார வளர்ச்சிக்கு இலக்கு இலாபம்.

191. சமுதாயத்துக்கும், வாடிக்கையாளர்களுக்கும் சேவை செய்வதால் இலாபம் உண்டாகும்.

192. லஞ்சம் ஊழலைக் காட்டிலும் இலாபம் நியாயமானதும், ஒப்புக் கொள்ளக் கூடியதும் சட்டத்துக்கு உட்பட்டதும் ஆகும்.

**193. போதிய அளவு இலாபம் தராத ஒரு தொழில் தொடர்ந்து நடந்து வரத் தகுதியற்றது!**

194. வருங்காலம் இன்று உருவாக்கப்படுவது. இன்றைய வேலைகளில் எழும் பிரச்சினைகளை எப்படித் தீர்க்கப்படுகிறதோ, அதற்கேற்ப வருங்காலம் உருப்பெறும். அந்த முடிவுகளில் நாளை எப்படி இருக்கும் என்பதும் அடங்கும்!

195. பயன்படுத்தப்படாத உற்பத்தித்திறனும், முழு அளவு உற்பத்தி திறன்களை பயன்படுத்தாதிருப்பதும் வளர்முக நாடுகளுக்கு மிகவும் விலை உயர்ந்த வீண் விரயங்களாகும்.

196. வாடிக்கையாளர் விலை கொடுப்பவரல்ல; அவர் பொருட்களை வாங்க முடிவு செய்பவர்.

197. நிர்வாகத்தின்ஒருமுக்கியமான வேலை, நாளைய பயங்கரமான நிர்வாகப் பொறுப்புகளை சமாளிக்கவல்ல நிர்வாகிகளை தயாரிக்க உதவுவதும், அவர்களை வளர்ப்பதுமே ஆகும்.

198. மனிதனோ, நிர்வாகியோ, முற்றிலும் சிறந்துவிட முடியாதாகிலும், அவர்கள் பழக்கத்தால்,

முயற்சியால், பயிற்சியால் போதுமான அளவு திருந்தி வளர முடியும்.

199. தொழிலதிபர்களுக்கும், வர்த்தகர்களுக்கும், தமக்குசமுதாயத்தில் என்ன இடமிருக்கிறது என்று நன்ருகத் தெரியும். அப்படித் தெரியாதவர்களுக்கு சமுதாயம் அவர்களது இடத்தைக் காட்டவும் செய்யும்!

200. மனித சமுதாய அமைப்பில் நிர்வாக உரிமை நியாயமானதாக வேண்டும். நியாயமானதாக நீடிக்க வேண்டும்.

201. நிர்வாகத்தில் நீதியும், நியாயமும் அதில் ஈடுபட்டுள்ள மனிதர்களுக்கு கௌரவமும், அந்தஸ்தும் அளிப்பதால் பெருகும். அவர்களுக்குப் பொறுப்புகள் தருவதால் வளரும், பொருளாதாரப் பயன்களே மட்டும் கணக்கிடுவதால் வளராது.

202. வேலேத்திட்டத்தை தயாரித்து அதை அமல் செய்வதற்கு எவ்வளவு தாமதமேற்படுகிறதோ அவ்வளவு ஆபத்துக்கள் அதிகரிக்கும்.

203. உங்கள் சிறந்த முதலீடுகளே நேற்றைய பிரச்சினேகளுக்காகப் பயன்படுத்தாதீர்கள். அவை நாம் நாளேக்கு திட்டமிட விரும்பும் திட்டத்திற்கு உருக்கொடுப்பதிலும், வளர்ப்பதிலுமே உரிய இடமிருக்கிறது.

204. புதுமைகளேக் கையாள்வதால் மட்டும், நிர்வாகம் சிறப்படைந்துவிட முடியாது.

205. காலத்தில் செய்யப்படும் வேலேகளே வாழ்க்கை!

206. ஒரு வேலேயில் திருப்தி கொள்ளுவதற்குத் தேவையான முறைகள் மாற வேண்டும்.

207. அநீதியும், அநியாயமும் என்றும் மனிதனுடைய மனதில் குடி கொண்டிருக்கிறது. தண்டனேக்கு கையில் தடியில்லே.

208. உற்சாகமூட்டுவதற்கு சிமைமுள்ளங்கியும் நாளுக்கு நாள் குறைந்து வருகிறது.

209. தமது கடமைகளே செய்ய முடியாத நிலேக்கு யாரையும் பதவி உயர்வளித்து விடாதீர்கள்.

210. ஒரு நிறுவனம் தயாரிக்கும் பொருட்களின் அல்லது சேவைகளின் விலே அதை வாங்க விரும்புகிற வாடிக்கையாளர்கள் எதிர்பார்க்கும் தகுதிகளில் ஒன்று மட்டுமே. அவர்கள் அவைகளில் வேறு பல தகுதிகளேயும் எதிர்பார்க்கின்றனர்.

211. மனிதர்கள் அவர்களே அளவிடப்படுவதற்கேற்ப நடந்து கொள்கின்றனர்.

212. ஊதியங்களில் வேற்றுமைகளும், ஏற்றத்தாழ்வுகளும் வேலே செய்ய உற்சாகம் இழப்பதற்கு முக்கிய காரணிகள்.

213. தோல்வி அடைவோர்கள் எப்படி சாதிப்பது என்று தெரியாதவர்களாக இருக்கலாம். ஆனுல் அவர்கள் உள்ளிருந்து வேலேயை சீர்குலேக்க நன்கு அறிந்திருப்பார்கள்!

214. அகப் பண்புகளே வெளி நடத்தைகளால் அளவிடு முறைப்படி மனிதர்கள் தன்னேத்தானே சீர்தூக்கிப் பார்த்து, தன்னேத் தானே மதிப்பிடுவதற்கு உதவுகிறது என்று கூறுகிருர்கள்.

ஆனால் அவ்வாறு செய்கிறவர்கள் ஒருசிலரே.

215. அறிவு அதற்குண்டான ஆற்றலையும், உரிமையையும், தனக்குள்ளேயே அடக்கியிருக்கிறது.

216. பணியாற்றுமுறை நிர்வாகிகளை நிர்வாகியாக வேண்டி எதிர்பார்க்கிறது. தானே நிர்வாகிக்கு எடுத்துக்காட்டாய் விளங்கும்படி நடந்து கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கிறது. இது பிறப்பு இறப்புகளுக்குட்பட்ட மனிதர்களுக்கு அப்பாற்பட்டதோர் ஆற்றல்!

217. நடத்தை முறை இயல் உண்மையில் ஒருவனை அகந்தையடையச் செய்கிறது.

218. நிர்வாக வளர்ச்சிக்கான முயற்சிகள் நாளைத் தேவைகளை எண்ணிப்பார்த்து இன்று செய்யப்படுதல் ஆகும்.

219. தகுதி வாய்ந்தவர்களை தேர்ந்தெடுப்பதில் செலுத்தும் கவனத்தைவிட தேர்ந்தெடுத்தவர்களை தக்கபொறுப்புகளில் அமர்த்துவது மிக முக்கியம்.

220. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதி ஆண்டுகளில் ஏற்பட்ட ஜனப்பெருக்கம் மிக்க நன்மை தருவதாக இருந்தது; ஆனால் 20-ஆம் நூற்றுண்டின் மத்தியில் ஏற்பட்ட ஜனப்பெருக்கம் ஒரு சுமையாகவும், தாங்கொணுப் பொறுப்பாகவும் இருக்கிறது.

221. மனிதர்களால் அமையப்பெற்றிருக்கும் ஓர் நிறுவனம், அன்றுடம் அதன் நிர்வாகத்தில் சமுதாயத்தில் நிலவும் நிலைகளுக்கு ஒரு பிரதிபலிப்பே ஆகும்.

222. சுய நிர்வாகம் செய்து கொள்ளும் ஒரு நிறுவன சமுதாய அமைப்பையே நமது நிர்வாகபிரச்சினைகளுக்கெல்லாம் திறவுகோலாகும்.

223. ஒருவருடைய முடிவு யாருடைய முடிவுமல்ல; அதுவும் ஜீவாதாரமான பொறுப்புகளில் பணியாற்றும் ஊழியர்கள் பற்றிய முடிவுகள் முற்றிலும் அல்லவே அல்ல.

224. பெரும்பாலும் ஊழியர்கள் செய்யும் வேலைகளை சீரில்லாது செய்வதற்குக் காரணம் அவர்களுக்குத் தரப்பட்டிருக்கும் பொறுப்புகள் அவர்களுக்கு ஏற்றதாக இல்லாமல் இருப்பதே.

225. ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்வதே நம்பிக்கைக்கு ஆதாரமாகும்.

226. நிறுவனங்களால் நிறைந்ததோர் சமுதாயத்தில் அனைத்து நிறுவனங்களும் எப்படி திறம்பட வேலை செய்கின்றனவோ, அவ்வளவே திறன்படத்தான் ஒவ்வொரு நிறுவனமும் பணியாற்றிவர முடியும்.

227. ஓர் அரும்பொருள் கிடைப்பதை பெருக்க இல்லாவிடில், கிடைக்கும் அப்பொருளை வைத்து, உற்பத்தியை பெருக்குவதே நல்லது.

228. உற்பத்தித் திறன் பெருகாமல் வளர்ச்சியடைவது, ஆற்றல் பெருகாமல், சதை வளர்வது போலாகும். உற்பத்தித் திறன்

குன்றிய வண்ணம், வளர்ச்சி ஏற்படுவது புற்று நோய்!

229. பொருளியல் வழி பயன் மிக்க முதலீடு என்றுலே ஒரு பொருளில் முதலீடு செய்து அதை விலையுயர்ந்த மற்றெரு பொருள் தயாரிப்பதே!

230. முறைகேடுகளும், முரண்பாடுகளும், மோதல்களும், பயனற்ற வேலைகளுமே ஒரு நிறுவனத்தில் தானே வளரக் கூடியவைகள்!

231. ஒரு வாடிக்கையாளர் அல்லது நுகர்வோர், அவரை நீங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கின்றீர்களோ, அவ்வாறு வெகுவாக நடப்பதில்லை!

232. ஒரு நிர்வாகி தனது வேலை நேரத்தில் 10% நேரத்தை விட கூடுதலாக ஊழியர்களிடையே மனித உறவு பிரச்சினைகளுக்காக செலவிட நேரிடுமாகில் அந்த நிறுவனமும், அதில் பணியாற்றுகின்ற ஊழியர்களும் உரிய அளவைவிட வெகு மடங்கு பெருகியிருக்கிருர்கள் என்று உணர்ந்து கொள்க!

233. நெடுநாள் நோக்குடன் திட்டமிடுதல் வருங்கால முடிவுகளை இன்றே செய்து விடுவதில்லை. ஆனுல் இன்று செய்யும் முடிவுகளின் நாளைய விளைவுகளைக் குறிப்பிடுவது.

234. நாட்டுப் பற்றுகளையும், நாட்டு எல்லைகளையும் தாண்டி செயல்படவல்லதோர் நிறுவன அமைப்பே நிர்வாகம் ஆகும். ● ●

முற்றும்



## வார்தாவில் வினேபா அடிகள் 84-வது ஜெயந்தி

வரும் செப்டம்பர் மாதம் 9, 10 தேதிகளில் மகாராட்டிரா மாநிலத்திலுள்ள வார்தா-பவனூர் ஆசிரமத்தில்வினேபா அடிகளின் 84-வது ஜயந்தி நாளில் கதர் ஊழியர்கள் கூட்டம் நடைபெற உள்ளது. நாட்டில் உள்ள கதர் ஊழியர்கள் அனைவரும் ஒன்று கூடி வினேபா அடிகளின் அறிவுரையும், ஆசியும் பெற்று நமது பிரச்சினைகளையும் ஆய்வு செய்வதென தீர்மானிக்கப்பட்டுள்ளது.

வினேபா அடிகளின் 84-வது ஆண்டு ஜயந்தி நாளை முன்னிட்டு அவருக்கு கதர் ஊழியர்கள் தாமே கையால் நூற்ற ஒரு சிட்டம் நூல் தந்து ஆசி பெறுவது நலம். வார்தா வர இயலாதவர்கள் ஒரு சிட்டம் வீதம் என்னிடம் சேர்ப்பித்தால், தங்கள் சார்பாக அதனை வினேபா அடிகளிடம் நானே சேர்ப்பித்து விடுகிறேன் என்பதை திரு. வெ. இராமச்சந்திரன் அவர்கள் தெரிவித்துள்ளார்கள்.



● இந்தியாவில் உருவாக்கப்பட்டுள்ள புதிய ஓட்டுப் பதிவு செய்யும், எண்ணும் கருவி மூலமாக நாடு முழுவதுமுடைய தேர்தல் முடிவுகளை 5 மணி நேரத்தில் அறியலாம்.

● உலகின் மிக அதிக வயதான ஆளும் கட்சியிலுள்ளவர் ஜப்பானிய அரசர் ஹிரோ ஹிட்டோ-இவர் வயது 80. இவர் மிக அதிக ஆண்டுகளாக ஆண்டு வருகிறார்.

● மேற்கு ஐரோப்பிய நாடுகளில் ஐஸ்லாந்து நாட்டு மக்கள் ஆண்டுக்கு பெருமளவு நாட்கள் உழைக்கின்றனர். ஓராண்டில் 2160 மணி நேரம் இந்நாட்டு மக்கள் பாடுபடுகிறார்கள். ஓய்வு : 24 நாட்கள்.

● அமெரிக்காவில் தொலைக்கண்காட்சி மூலம் அரை நிமிடம் விளம்பரம் செய்ய கட்டணம் எவ்வளவு தெரியுமா? 1,00,000 டாலர்கள்.

● மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கு அரசினர் பெண்கள் கல்லூரியிடமிருந்து 1½ ஆண்டு வாங்கிய ரூ. 1.03 லட்சம் மதிப்பிற்கான காசோலைகள் 6 மாதத்திற்குள் மாற்றப்படாததால் நட்டம் ஏற்பட்டுள்ளது.

● தனி நபர் வருமானத்தில் முதன்மை பெறும் நாடு சுவீடன். அடுத்த இடத்தை சுவிட்சர்லாந்து, கனடா, அமெரிக்கா, நார்வே முறையே இடம் பிடிக்கின்றன.

● பரபரப்பான சூழ்நிலையை உண்டு பண்ணிய அமேதி தொகுதியில் ஒரு வருடத்தில் மக்கள் தனி நபர் வருமானம் ரூ. 171 மட்டும். இது உத்திரப் பிரதேசத்தின் சராசரி அளவில் நான்கில் ஒரு பகுதியாகும்.

● ஜூன் 30, 1980 அன்று கணக்குப்படி தீர்க்கப்படாத வழக்குகள் நம் நாட்டில் 6,25,670 உள்ளன. இவற்றில் தனி நகரில் அலஹாபாத்தில் மட்டும் 1,05,785 வழக்குகள் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

● உத்திரப்பிரதேசத்தில் 5½ மாதங்களில் 1980-ல் 1492 கொலைகள் நிகழ்ந்துள்ளன.

# விண்வெளியிலும் ஆயுதப் போட்டி

சுவீடன் நாட்டில் ஒரு அமைதி ஆராய்ச்சி நிறுவனம் வேலை செய்து வருகிறது. அது அந்தநாட்டுதலைநகர்ஸ்டாக்ஹோமில் செயல்பட்டு வருகிறது. அதன் பெயர் ஸ்டாக்ஹோம் அனைத்துலக அமைதி ஆராய்ச்சி நிறுவனம். (Stockholm International Peace Research Institute) அந்த நிறுவனம் சென்ற ஆண்டில் மட்டும் மொத்தம் 103 இராணுவ நோக்குப் படைத்த கோள்கள் விண்வெளியில் செலுத்தப்பட்டதாகக் கூறுகிறது!

சோவியத் நாடு 89 கோள்களையும், அமெரிக்க ஐக்கியக் குடியரசு 14 செலுத்தியதாக அந்த நிறுவனம் கூறுகிறது. எண்ணிக்கை அதிகமாயிருப்பதால் சோவியத்து நாட்டின் விண்வெளிக் கோள்கள் அமெரிக்க நாட்டின் கோள்களைவிட வல்லமை மிக்கதென்று சொல்லிவிட முடியாது. சோவியத்து நாட்டின் கோள்கள் குறுகிய ஆயுளுடையனவாக இருக்கின்றன.

சென்ற ஆண்டில் செலுத்தப்பட்ட இத்தகைய கோள்களில் சில ஈரானுக்கும், ஈராக்குக்கும் இடையே மூண்ட போரை பார்வையிடுவதற்காக செலுத்தப்பட்டனவாம்.

அந்த நிறுவனத்தின் தகவல்கள் சேகரிப்புப்படி சென்ற ஆண்டு பூமிக்கடியில் 49 அணுகுண்டுகள் சோதனைக்காக வெடிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளில் 20 சோதனைகளை சோவியத்து நாடும், 14 சோதனைகளை அமெரிக்க ஐக்கிய நாடும், 11 சோதனைகளை பிரான்சும், பிரிட்டன் நான்கையும், சீனா ஒன்றையும் நடத்தியிருக்கிறது.

இரண்டாவது உலகப் போர் முடிந்த பின் 1980-ஆம் ஆண்டு முடிய மொத்தம் 1272 அணு ஆயுத சோதனைகள் செய்யப்பட்டிருக்கின்றன. இவைகளில் அமெரிக்காவும், சோவியத் நாடுகள் மட்டும் 1,100 சோதனைகள் நடத்தியிருக்கின்றன. ●●

# முடக்கத்திலிருந்து தப்ப.....

1979-ஆம் ஆண்டில் அமெரிக்க வங்கிகளில் டெபாசிட் செய்யப்பட்டிருந்த ஈரானிய டாலர் இருப்புகளை ஜனாதிபதி கார்ட்டர் முடக்கினார். இதன் விளைவாக அரபு நாட்டு நிதி நிர்வாகிகளுக்கு கிலி தட்டி விட்டது. முடக்க முடியாத வங்கிகளை அவர்கள் உலகெங்கும் தேடி அலைகிறார்கள்.

சவூதி அரேபியர்கள் அமெரிக்க வங்கிகளில் இன்று சுமார் 2200 கோடி டாலர் டெபாசிட் செய்து வைத்திருக்கிறார்கள். (சுமார் 17,600 கோடி ரூபாய்) இவ்வளவு பணத்தையும் முன் அறிவிப்பின்றி திரும்பப் பெறுவார்களானால்; அமெரிக்காவில் ஒரு பெரும் நிதி நெருக்கடி ஏற்படுத்தாமலிருக்க முடியாது. ஆனால் சவூதி அரேபியா தவிர, குறைந்த டெபாசிட்களை டெபாசிட்டாக அமெரிக்க வங்கிகளில் வைத்திருக்கும் வேறுபல சிறு அரபுநாடுகள் அவர்களது அமெரிக்க முதலீடுகளை சலவை செய்ய வேறு பல தந்திரங்களை கையாண்டு வருகின்றன. அவர்களுடைய முடக்க முடியா வங்கியின் பெயர்-''மாஸ்கோ நரோட்னி வங்கி!''

இந்த சோவியத் வங்கி அண்மையில் குவைத், லிபியா இன்னம் ஓரிரண்டு எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகளிடமிருந்து சுமார் 120 கோடி டாலர் (ரூ. 960 கோடி). டெபாசிட்டை ஆவலுடன் பெற்றுக் கொண்டது. இந்த வங்கியிலிருந்து இந்த அரேபியர்கள் சிறிது குறைவாக வட்டி பெறுவார்கள். ஆனால் இந்த பணத்தை அந்த வங்கி குறுகிய கால அமெரிக்க அரசு கருவூல பில்களாக மாற்றிக் கொள்ள முடியும். இந்த பில்கள் ஒரு சோவியத் வங்கியின் பெயரில் இருக்குமாதலால், ஜனாதிபதி ரீகன் இவைகளை முடக்கி வைக்க விரும்பினாலும் முடக்கிட முடியாது. எனவே மத்திய கிழக்கு தென் ஆசியாவில் முழு நெருக்கடி ஏற்பட்டாலும் அரபு பணம் பத்திரமாக பாதுகாப்புடனிருந்து வரும்.

லெனின் தன் வாழ்நாளில் இதையேதான் குறிப்பிட்டு முதலாளித்துவ நாடுகளின் முதலீடுகளை பயன்படுத்தி சமதர்ம சமுதாய சொர்க்கலோகத்தை அமைத்து விடலாம் என்று கூறி வந்தார்.

காய் பிரிடு-நியூ

நன்றி : ஸ்டேட்ஸ்மென் ஏப்ரல் 1981.

# குடியால் கெடும் குடிகள்

பிரிட்டிஷ் சத்துணவு ஆய்வு நிலையம் அண்மையில் வெளியிட்டிருக்கும் சில ஆய்வுக் குறிப்புகளிலிருந்து கருவுற்ற சில மாதங்களில் அமிதமாகக் குடிக்கும் பெண்கள் பெற்றெடுக்கும் குழந்தைகள் உடல், உள ஊனமுற்றவைகளாக இருக்கும் ஆபத்தை எதிர் நோக்குகிறார்கள் என்று கூறுகிறது. பிறவியில் குழந்தைகள் மிகச் சிறியனவாக இருக்கின்றன என்பதுடன், அவை வளரும் பொழுதும் அப்படியே குட்டையும், ஒல்லியுமாக இருக்கின்றனவாம். சாதாரணமாக இத்தகைய பெண்கள் பெற்றெடுக்கும் குழந்தைகளின் முகம் தட்டையாகவும், மூக்கு குட்டையாகவும் இருக்கின்றனவாம். சில குழந்தைகளுக்கு மேல் உதடு பிளந்தும், கீழ் உதடுகள் முயல்களின் உதடுகளுக்கொப்பாகவும் இருக்கின்றனவாம். பல குழந்தைகளுக்கு கிட்டப்பார்வை உடையவர்களாயும் இருக்கின்றார்களாம். (Short Sight) அனைத்து குழந்தைகளும் மந்தமாயிருக்கின்றார்களாம். இதற்கு காரணம் குழந்தைகளின் மூளையின் வளர்ச்சியையே போதை தடை செய்து விடுகிறது என்பதே.

## நூற்றுக்கு ஏழு பேர்களே குடிக்காதிருக்கிறார்கள்

இந்த ஆய்வுகளுக்கேற்ப கருவுறும் பெண்களில் நூறு பேர்களில் ஏழு பேர்களே கள் அல்லது சாராயம் குடிக்காதிருக்கிறார்கள். மிதமிஞ்சி குடிப்பவர்கள் சிலரே. தினந்தோறும் மூன்று அல்லது நான்கு முறைகள் குடிக்கும் மாதர்கள் 6% ஆவர். ஆனால் குடிக்கும் பெண்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறார்கள். 1970-ஆம் ஆண்டு முதல் 1978-ஆம் ஆண்டு முடிய குடி போதை காரணமாக மரணமடைந்தோரின் எண்ணிக்கை 130% அதிகரித்துள்ளது. இதற்குக் காரணம் பெண்கள் உருவில் சிறியவர்களாயிருப்பதால் அவர்கள் உடலில் தண்ணீர் குறைவாயிருக்கிறது. எனவே போதை வேகமாக ஏறி விடுகிறது. 1960-ஆம் ஆண்டுகளில் மத்திய காலம் முதல் 1970-ஆம் ஆண்டுகளின் மத்திய காலம் வரை குடிப் பழக்கம் உடையோர் எண்ணிக்கை மும்மடங்காக பெருகியிருக்கிறது. இப்படி பெருகுவதற்கு ஒரு முக்கிய காரணம் மது விளம்பரங்கள். மது விளம்பரங்கள் இவர்களையே குறி வைத்து தமது விளம்பரத் தந்திரங்களனைத்தையும் பயன்படுத்தி வருகின்றன. மேலும் இப்பொழுது மது வாங்குவதும் இலகுவாகி விட்டது. அவர்கள் சூபர் மார்கெட்டில் இதர பல சரக்கு சாமான்கள் கொள்முதல் செய்யும் பொழுதே மது பாட்டில்களையும் சேர்த்து வாங்கி கொள்ளலாம். மற்றொரு காரணம் இந்த மாதர்கள் பெருகும் எண்ணிக்கைகளில் கட்டாயங்களும், தவிர்க்க இயலாமைகளும், நிறைந்த பல வேலைகளில் ஈடுபட நேரிட்டுள்ளது. இத்துறைகளில் பணியாற்றி வரும் ஆண்களும் பெருங்குடிப் பழக்கமுடையவர்களாகவே இருக்கின்றனர். தமிழர்களை இந்த நிலையிலிருந்து சென்ற 34 வருடம் காப்பாற்றிய உத்தமர்களுக்குத் தலை வணங்குவோம். அதே போன்று இல்லாது அந்த பழக்கத்துக்கு தமிழினத்தை பலியாக்க முனைந்திருக்கும் மடமையை கண்டிக்காதிருக்கவும் முடியாது!

தலையங்கம்

# எரிபொருள் தேடி!

## விசை - ஆற்றல் - எரிபொருள்

*இந்தக் கட்டுரையில் விசை அல்லது ஆற்றல் என்ற சொல் ஆங்கிலத்தில் Energy என்ற சொல்லுக்குச் சமமாகவும், எரிபொருள் என்ற சொல் Fuel என்ற சொல்லுக்குச் சமமாகவும் பயன்படுத்தப் படுகிறது. இரண்டு சொல்லும் வேறு வேறு பொருட்களையும், பயன்களையும் தர வல்லது. எரி பொருள் விசையாக மாறலாம். விசை எரி பொருளாக மாற முடியாது.*

இரண்டாவது உலகப் போர் முற்றிய பின் உலகத்தின் மிக முக்கிய பிரச்சினை உணவாக இருந்தது. அந்தப் பிரச்சினையை எல்லையற்ற ரசாயன உரங்கள், ஏராளமான தண்ணீர், வீரிய விதைகள், பூச்சி கொல்லிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தி தீர்த்து விட்டதாக ஓர் ஏமாற்ற நிலையை சென்ற 30 ஆண்டுகளில் அடைய முடிந்தது. இதை அனைத்தும் மாயம் என்பது 1973-ஆம் ஆண்டு திடீரென எரி பொருட்களில் முதலிடம் பெற்றிருக்கும் எண்ணெய் விலைகள் 10 மடங்கு அதிகரித்ததிலிருந்து தெளிவாயின. 1981-க்குள் அடுத்த உலகப் போர் உலகில் எஞ்சியிருக்கும் எரி பொருட்களுக்காக ஏற்படுமா? என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது. இன்று அனைத்து நாடுகளும் தமது வளர்ச்சிக்கும், வளமைக்கும் எரி பொருள் தடையின்றிக் கிடைப்பதும், தேவையான விசை தயாரித்து பயன்படுத்துவதும், தவிர்க்க முடியாததாக கருதுகிறது. வளரும் நாடுகளுக்கும், வளர்ந்த நாடுகளுக்கும் கூட ''எரி பொருள்'' ஒரு கவலைக்கிடமளிக்கும் பிரச்சினையாக இருந்து வருகிறது. எனவே இன்று உலகை வாட்டும் கவலையனைத்தும் இந்த எரிபொருள் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதே. சமுதாயத்தின் ஆற்றல் - விசைத் தேவைகள் எங்கிருந்து கிடைக்கும்? என்ற கவலையே இன்று உலகை வாட்டுகிறது. சிக்கல் அனைத்தும் இந்த விசை எரி பொருட்களிலிருந்து தான் சேகரிக்க முடியும் என்ற கருத்தும், அவை ஒரு சில நாடுகளிடம் சிக்குண்டிருப்பதுமே ஆகும்.

இன்று அன்றாட வாழ்க்கையில் எத்தகைய எரி பொருளையும், விசையையும் பயன்படுத்தாது வாழும் மக்கள் எஸ்கிமோக்கள். அவர்கள் விலங்குகள், கால்நடைகளின் தோல் அல்லது உரோமங்களைப் பயன்படுத்தி, உடலை வெப்பமாக வைத்திருக்கிறார்கள். உணவை இயற்கை நிலையிலேயே அருந்துகிறார்கள். சமையல் கலை அவர்களுக்கில்லை. விவசாயம் இல்லை.

அவர்களுக்கு எவ்வித நெருக்கடியும் இல்லை. போக்குவரத்துக்கு நாய்களையும், ரையின்தீர் எனும் ஒரு வகை பனி மான்களையும் பயன்படுத்துகிருர்கள். மருந்தில்லை. மாயமில்லை. அவர்கள் வாழும் இடம் மிகுந்த குளிர்ச்சியுடைய வடதுருவப் பிரதேசம். எனவே இது தானுகவே பொருட்கள் குளிர்பதனிட்டு சேமிக்கப்பட்ட நிலையிலிருப்பதால் கெட்டுப் போவது கிடையாது.

இந்த அற்புத நிலை உலகில் மற்ற பாகங்களுக்கு இல்லை. வெப்பம், குளிர்ச்சி, ஒளி, ஒலி, போக்குவரத்து, உணவு உற்பத்தி, தயாரிப்பு, பொருட்களை உருமாற்றுதல், பொருட்களை சேகரித்தல் அனைத்துக்கும் விசை தேவைப்படுகிறது. இந்த விசை எங்கிருந்து கிடைக்கும்? அவைகளுக்காக என்ன விலை தர வேண்டும். எரிபொருளுக்காக தரப்பட்டு ஒரு சில நாடுகளில் குவியும் ஏராளமான பணம் உலகச் சந்தைகளில் பொருள் தட்டுப்பாடுகளையும், விலையேற்றத்தையும் உண்டாக்கி வருகிறதே. அதை எப்படித் தவிர்ப்பது போன்ற பலப்பல சிக்கல்கள் தோன்றி வருகின்றன.

இவைகளுக்குத் தீர்வு காண முற்படு முன் நமக்கு எத்தனை விசை தேவை. எவைகளுக்காகத் தேவை. அவை எங்கிருந்து கிடைக்கும் முதலியன பற்றியும் சிந்திப்பது அவசியம்.

எனவே விசைத் தேவைகளை நாம் பயன்படுத்தும் பொருட்கள் தேவைகளைப் பொறுத்துத் தான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. நாம் பயன்படுத்தும் கார்கள், உணவு, உடை, புத்தகங்கள் கூட விசையின்றித் தயாரிக்க முடியாது. எனவே நமக்கு ஒரு துண்டு ரொட்டி செய்ய எவ்வளவு விசை தேவைப்படுகிறது? ஒரு மீட்டர் துணி தயாரிக்க எவ்வளவு விசை தேவைப்படுகிறது என்பதைத் தெரிந்து கொண்டால் நமக்கு எத்தனை எரிபொருள் தேவை, எத்தனை விசை தேவை என்பதைக் கணக்கிட்டு விடலாம்.

இது மட்டும் போதாது. கிடைக்கும் எரிபொருளை சேதமின்றி ஆற்றலாக்கி பயன்படுத்துவதற்கு உபயோகப் படுத்தப்படும் தொழில் நுட்பங்களும், அறிவியல் தத்துவங்களும் தெரிந்திருப்பதும் அவசியம். இந்த அறிவியல் தத்துவங்களை நாம் தெரிந்து கொள்ளாவிட்டால் நாம் சில சில்லரை தவறுகளைச் செய்து பெரு நட்டங்களை அடையும் சூழ்நிலை உருவாகும்.

''ஆற்றல்'' அல்லது ''விசை'' என்ற சொற்களே சந்தர்ப்பத்திற்கேற்ப பொருள் மாற்றம் தரக்கூடிய சொற்களாகும். சுறுசுறுப்பான மனிதர்கள் ''ஆற்றல்'' மிக்கவர்களாகக்கூறப் படுவர். எரிபொருள் தட்டுப்பாடு ஏற்படும் பொழுது ''விசை'' நெருக்கடி ஏற்பட்டிருப்பதாகக் கூறுகிறோம். தனியார்களுக்கு தமது ஆற்றல்களை சேமித்து வைக்கும்படி ஆலோசனை கூறப் படுகிறது. கல்லூரி வகுப்புகளில் ''விசைகள்'' வீண் போவதில்லை என்று போதனை செய்யப்படுகிறது. பல பெயர் பெற்ற விஞ்ஞானிகள் ''விசை'' வீணுகா

திருக்க சட்டமியற்றும்படி அரசுக்கு ஆலோசனை தந்துள்ளனர். இவைகளிலிருந்து கல்லூரி வகுப்புகளில் விளக்கம் தரப்படும் ''விசைக்கும்'' அரசியல் வாதிகளுக்கு விளக்கம் தரப்படும் ''விசைக்கும்'' பொருள் வேற்றுமை இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

ஆற்றல் அல்லது விசையை தொட்டுப் பார்த்து, ஒலியால் அல்லது மனத்தால் தெரிந்து கொள்ள முடியாத ஒரு பொருள். அது ஒரு கருத்து. எண்ணம் நேர் பார்வைக்குப் புலன்படாத ஒரு பொருள். ஒரு வகையில் அதற்கு ஆன்ருேர்கள் ''கடவுளுக்கு'' கற்பனை செய்த அத்துணை குணங்களும் இருக்கிறது. மனதில் இந்த ஆற்றலுக்கும், விசைக்கும் நல்கும் கற்பனை குணங்களால் தோன்றும் விளைவுகளையே விஞ்ஞானிகள் நமக்கு விளக்குகின்றனர்.

சுருங்கக் கூறினல், வேலைகள் செய்யப் பயன்படும் ''சக்திக்கு'' ஆற்றல் அல்லது விசை எனப்படுகிறது. இதிலிருந்து அறிவியல்சொற்களில் ''அனைத்து செய்முறைகளிலும், அனைத்து அசைவுகளிலும், அனைத்து வேலைகளிலும், ஆற்றல்களின் உருமாற்றம் ஏற்படும்'' என்று கூறுவது பொருந்தும். எனவே ஒரு வாகனத்தை பாதையில் செலுத்தவும், ஒரு துண்டு இரும்பை வளைக்கவும், ஒரு அறையின் வெப்ப நிலையைக் கூட்டவும் அல்லது குறைக்கவும், ஆற்றல் தேவை என்பது புலனுகின்றது. ஆனல் செடி கொடிகள், கால்நடைகள், இதர பிராணிகள் வளர்ச்சிக்கும் ''ஆற்றல்'' தேவைப்படுகிறது என்பது அவ்வளவு எளிதாகப் புலனுவதில்லை. தகவல் இடம் விட்டு இடம் செல்வதற்கும் ''விசை'' தேவைப்படுகிறது என்பதும் அவ்வளவு எளிதில் புலனுவதில்லை.

எனவே அனைத்து துறைகளிலும் தற்கால வாழ்க்கைத் தேவைகளுக்கு ''விசை'' அவசியமாகிறது. தொழில்மயமான சமுதாயங்களில் மக்களின் உற்பத்தித் திறன்கள் மனிதர்களின் ''ஆற்றல்'' அல்லாத பலவகை விசைகளைப் பயன்படுத்தி அதிகரிக்கப்படுகிறது. இத்தகைய ''ஆற்றல்'' நிலக்கரி, இயற்கை எரிவாயு, எண்ணெய் முதலியவற்றிலிருந்து கிடைக்கிறது.

மேலும் பலவகை ஆற்றல்கள் இருக்கின்றன. சூரிய ஒளி, வெப்பம், காற்று, வெப்பக்காற்று ஆகியவைகளிலும், ''விசை'' இருக்கிறது. ஆனல் அவைகளைப் பயன்படுத்தி வேலை செய்வதற்கு தக்க நுட்பங்கள் நம்மிடம் இன்று இல்லை. எனவே இன்று நமது பிரச்சினை ''ஆற்றல் தட்டுப்பாடு'' அல்ல. ''விசை'' தட்டுப்பாடு அல்ல. இன்று ஏற்பட்டுள்ள தட்டுப்பாடு ''தொழில் நுட்பங்களின் தட்டுப்பாடே.

எனவே ''தொழில் நுட்பங்களில் பயன்படும் விசைக்கு'' இனிமேல் நாம் எரிபொருள் என்று பெயர் சூட்டி பயன்படுத்தலாம். இன்று நமது சமுதாயத்தின் சிக்கல்கள் எல்லாம் தங்கு தடையில்லாது தொடர்ந்து கிட்டும் ஓர் ''எரிபொருள்'' சப்ளை

நமக்குத் தேவையாயிருப்பதும், அது தட்டுப்படுவதுமே ஆகும்.

1985-ஆம் ஆண்டிற்கும் 2000-ம் ஆண்டிற்கும் இடையே எரிபொருட்கள் தட்டுப்பாடும், விசை பூர்த்திக்கு மாற்று வழிகளும் பற்றி அனைத்துலக ஒத்துழைப்புடன் ஒரு சோதனைக்குழு பணியாற்றியது. அந்தக் குழுவின் அறிக்கை பற்றி தனி பகுத்தாய்வு பின்னர் தரப்படும். அந்தக் குழுவின் முடிகள் இந்த அட்டைப் படத்தை விளக்க உதவும்.

1985 ஆண்டுக்குள்ளாகவே உலக எண்ணெய் (எரிபொருள்) உற்பத்தி வளரா நிலையடைந்து சமநிலை அடைந்து விடும். அது முதல், உலகத் தேவைகள் மாற்று முறைகளால் தான் பூர்த்தி செய்யப்படும். எனவே அடுத்த நூற்றுண்டுக்குள் எரிபொருள் எண்ணெயை நம்பியதோர் நாகரிகத்தை மாற்றுப் பொருட்களைப் பயன்படுத்தி இயங்கும் வழிவகைகளைக் கண்டுபிடித்து, அவைகளைப் பயன்படுத்தி இயங்குமோர் தொழில் முறையாக மாற்றம்செய்வதே எனலாம். நிலக்கரி, எரிவாயு, அணுவிசை இவைகளைத் தொடர்ந்து பூமிக்கடியில் இருக்கும் வெப்பம், சூரிய வெப்பம், சூரிய ஒளி, காற்று, கடல், அலைகள், நீர் வீழ்ச்சி, முதலியவைகளைப் பயன்படுத்தும் முறைகளையும் பயன்படுத்த தொழில் நுட்பங்களைத் தயாரித்தல் வேண்டும்.

இன்று எண்ணெய் உற்பத்தி செய்து, ஏற்றுமதி செய்யும் நாடுகள் தான் உலக எரிபொருள் தேவைகளின் தாகத்தைத் தணித்து வருகின்றன. அந்நாடுகளில் மதிப்பிடப்பட்டுள்ள எண்ணெய் வளம் 1976-ஆம் ஆண்டில் 45,000 கோடி பேரல் எண்ணெய் இருக்கும் என்று கூறுகிறது.

1975-ஆம் ஆண்டில் தினந்தோறும் இந்நாடுகள் 2 கோடியே 73 லட்சம் பேரல்கள் வீதம் எண்ணெய் இறைத்து எடுத்து வந்துள்ளன. இது ஒரு ஆண்டில் மொத்தம் 997 கோடி பேரல் எண்ணெய் இறைத்தெடுப்பதற்கு ஒப்பாகும்.

இந்த இரண்டுக்கும் இடையே உள்ள தொடர்பு 45:1 என்ற விகிதமாகும். அதாவது இதே அளவு எண்ணெய் உற்பத்தி நீடிக்குமானல் இன்று இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கும் எண்ணெய் வளம் 45 ஆண்டுகளில் முற்றிலும் தீர்ந்து போய் விடும்.

ஆனல் சேதங்கள், எண்ணெய் இறைப்பதில் ஏற்படும் சங்கடங்கள் காரணமாக இந்த நிலையை 45 ஆண்டுகளில் அல்ல, சுமார் 37 ஆண்டுகளிலேயே அடைந்து விடுவோம்.

இதர எண்ணெய் இறக்குமதி செய்யும் நாடுகளின் உற்பத்தியும், இறக்குமதியும் சேர்ந்து அந்நாடுகளின் சொந்தத் தேவைகளுக்கே பற்ருக்குறையாக இருப்பதால் அவைகள் உலகப் பற்ருக்குறையைத் தணிக்க இயலாத நிலையிலிருக்கின்றன.

எண்ணெய் ஏற்றுமதி செய்யாத வளரும் நாடுகளில் மொத்தம் 2,600 கோடி பேரல் எண்ணெய் வளமே இருக்கிறது. இது

சுமார் எண்ணெய் வளமிக்க எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகளின் வளமையில் சுமார் 10-இல் 1 பங்கிற்கும் குறைவு. அதாவது உலக எண்ணெய் மொத்த வளத்தில் இந்நாடுகளில் 5% விகிதமே இருக்கின்றன.

இன்று உலக எண்ணெய் மார்க்கெட்டில் விற்பனைக்கு வரும் எண்ணெயில் 80% வரை எண்ணெய் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யும் நாடுகளே உற்பத்தி செய்கின்றன.

1985-ஆம் ஆண்டுக்குள் எண்ணெய் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யும் நாடுகளல்லாத நாடுகளில், கணிசமான அளவு எண்ணெய் உற்பத்தி மூன்றே நாடுகளில் தான் ஏற்படும். அவை மெக்சிகோ, பிரேஜில், எகிப்து என்பனவாகும்.

ஐரோப்பிய நாடுகளும், ஜப்பானும், வட அமெரிக்க நாடுகளும் பிற நாட்டு எண்ணெய் வளத்தை எதிர்பார்த்தே தமது ''விசை'' தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும்.

நிலக்கரி, எரிவாயு, மின்சாரம் முதலிய ''விசை'' தரும் எரிபொருட்களும் ''விசை'' தேவையைப் பூர்த்தி செய்யும். ஆனால் இன்று முதல் 50-ஆவது ஆண்டில் உலக எரிபொருள் சந்தை முற்றிலும் உருத் தெரியாமல் மாறியிருக்கும். ● ●

— வெ. இராமச்சந்திரன்



## 6 கதிர் உலோக இராட்டை புதிய நூற்பு நிலைய கட்டடம் திறப்பு விழா

அம்பாசமுத்திரம் சர்வோதய சங்கம் சேரன்மாதேவி கிளை மூலம் இயங்கி வரும் இரண்டு யூனிட் உலோக இராட்டை இயங்க புதிய கட்டடத் திறப்புவிழா 18-5-81 அன்று திங்கட்கிழமை காலை நடந்தது.

விழாவிற்கு அம்பாசமுத்திரம் சர்வோதய சங்க தலைமை அலுவலக நிர்வாகி கே. முத்துராமலிங்கம் தலைமை வகித்தார். விழாவில் திரு. கே. ஜெகதீசுவரன், திரு. எஸ். பாடகலிங்கம், திரு. சுப்பிரமணியன், திரு. எஸ். இராமநாதன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்கள். கூட்டத்திற்கு நூற்போர்களும், நெய்வோர்களும், ஊழியர்களும், பொது மக்களும் கலந்து கொண்டனர்.

ஆரம்பத்தில் நிர்வாகி திரு. வி மகாலிங்கம் வரவேற்க, திரு. ஆ. முத்துசாமி நன்றியுரை கூறினர்.

# பிரிட்டனில்
# வேலையில்லாத் திண்டாட்டம்

பிரிட்டனில் வேலையில்லாத் திண்டாட்டம் மாதந்தோறும் மேலும், மேலும் வளர்ந்து கொண்டே வருகிறது. இன்று அது அந்நாட்டு மொத்த வேலை செய்வோரில் 11.1% வரை எட்டியிருக்கிறது. இதன் பொருள் அந்நாட்டில் வாழும் மக்களில் 9 பேர்களுக்கு ஒருவர் வீதம் வேலை இல்லாதவர்களாக இருக்கின்றனர். வேலையில்லாதோர் எண்ணிக்கை இவ்வளவு கூடுதலாக வளர்ச்சியடைவதற்கு முக்கிய காரணம் இறுதி ஆண்டு பள்ளிப் படிப்பை முடித்த சுமார் 1 லட்சம் மாணுக்கர்கள் இந்த வேலையில்லா படையில் திடீரென்று நுழைந்தது ஒரு காரணம். அரசு வட்டாரங்கள் மதிப்பிடுவது போல் நிகழ்ந்தால் அடுத்த மாதம் வேலை தேடும் தொழிலாளர்கள் எண்ணிக்கை 30 லட்சம் பேர்கள் வரை இருப்பார்கள் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஆகஸ்டு மாதம் 1981-ல் எதிர்பார்க்கும் நிலவரம்.

### பூசி மெழுகுகிறது

இந்த புள்ளி விபரங்களை மேலெழுந்த வாரியாக பொருளற்றதாகக் கருதி அரசு மறந்துவிட முனைந்துள்ளது. முதியோர்களிடையே வேலையில்லா நிலை குறைந்து வருவதாக அவ்வரசு கருதுகிறது.

### 30 லட்சம் பேர்கள் வேலையிழந்துள்ளார்கள் ஆனால் இந்த வருடம் மாதம் 5000 பேர்களே

இவ்வாண்டு ஜுன் மாதம் பிரிட்டனில் ஏறத்தாழ 5000 பேர்களே வேலை இழந்தார்கள். முன் காலங்களில் இதே மாதம் இப்படி வேலை இழப்போர் எண்ணிக்கை இதைவிட ஆறுமடங்கு அதிகமாயிருந்துள்ளது. ஆனால் கசப்பான உண்மை யாதெனில் அந்நாட்டில் கடந்த 50 வருட காலத்தில் இவ்வளவு பேர்கள் வேலை இழந்து இருந்ததே கிடையாது!

### பிரதமரின் கொள்கைகளே காரணம்

சென்ற இரண்டு வருட காலத்தில் திருமதி மார்கரட் தாட்சர் அம்மையார் கடைபிடித்து வரும் பொருளாதாரக் கொள்கைகளின் விளைவாக அந்த நாட்டில் வேலையில்லாது திண்டாடுவோர் எண்ணிக்கை இரண்டு மடங்காகியிருக்கிறது. அண்மையில் இந்த நிலை சீர்படுவதற்கான அறிகுறிகளும் காணோம்.

### இருநாடுகளும் ஒரே திசையில்

இந்தியாவும், பிரிட்டனும் வேறு பல துறைகளில் மாற்றுக் கருத்துடைய நாடுகளாயிருப்பினும், இந்தத் துறைகளில் ஒத்த கருத்துடைய நாடுகள் என்பது தெளிவு. பொருளாதாரக் கொள்கைகளும் ஏறத்தாழ அப்படியே! ●●



# கல்லுப்பட்டியில் ஒரு காந்திய வீரர்

✳ ரா. குருசாமி அவர்களுடன் ஒரு பேட்டி

தேசியப் போராட்டத்திற்குப் பல தியாகச் செம்மல்களை உருவாக்கிட வழி காட்டி, நெறி வகுத்த இடம் கல்லுப்பட்டி எனில் மிகையன்று.

மதுரை தே. கல்லுப்பட்டி காந்தி நிகேதன் எனும்போது நம் கண் முன் நிற்பது கல்லுப்பட்டி ரா. குருசாமி அவர்களே!

ஆசிரமம் தோன்றவும், இன்று பஜாஜ் விருது பெற்று பாரதமே வியக்கும் அளவு வளரவும் ஆணி வேராக இருந்து 17 ஆண்டுகள் செயலாளராகப் பணி புரிந்தவர் ரா. குருசாமி அவர்கள். அவருக்கு இன்று 75-வது பிறந்த நாள்.

எனவே அவரின் பேட்டியை சர்வோதயத்தில் வெளியிடுவதில் மெத்த மகிழ்வடைகிறோம்.

— *ஆசிரியர்.*

கல்லுப்பட்டி ரா. குருசாமி அவர்களிடம் அவரது இளம் பிராயத்தைப் பற்றிக் கேட்ட போது, அவருடைய பதில் மாணவர்களுக்கு ஒரு படிப்பினை யாகவும் இளந் தலைமுறைக்கு ஒரு சவாலாகவும் இருந்தது. தம் 4-வது வயதிலேயே தந்தையை இழந்த அவர் சில குடும்பச் சூழ் நிலைகள் காரணமாக எஸ். எஸ். எல். சியைத் தான் எட்டிப் பிடிக்க முடிந்தது என்றாலும், வாழ்க்கைப் பள்ளியில் அவர் பயின்ற பாடம் கணக்கிலடங்கா! இளமையி லேயே பெருந் தலைவர் காமராஜ், பகுத்தறிவுத் தந்தை ஈ. வெ. ரா. பெரியார் ஆகியோருடன் தொடர்பு கொண்டிருந்தமையால் இயற்கையாகவே தேசப்பற்றும் விடுதலை உணர்வும் அவர்பால் குடி கொண்டிருந்தன. தமது 28-வது மற்றும் 30-வது வயது களில் அவர் பங்கு பெற்ற சுதந்திர, விடுதலை இயக்கங்கள் எங்களைக் கேட்கக் கேட்கப் புல் லரிக்க வைத்தன என்றால் அது மிகையாகாது.

''உங்களை காந்திய வழியில் கொண்டு சென்றமைக்கான அடிப் படைக் காரணம் ஏதாவது உண்டா?'' என்ற கேள்விக்கு அவரது மிகச் சுருக்கமான விடை இது தான். ''அண்ணலின் தேசிய உணர்வும் தியாக மனப்பான்மை யும், என்னை அவர்பால் ஆகர்ஷித் தன! நான் மட்டுமல்ல; என் காலத்தில் எண்ணற்றவர்கள் அண்ணலின் தியாக மனப்பான் மையால் ஆகர்ஷிக்கப்பட்டு, காந்தியத் தொண்டர்களாக மாறினார்கள்!

அவருடைய ஆசிரம வாழ் வைப் பற்றிக் கேட்ட போது, வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப்பிடிப்பதில், அழிவில்லாத ஆத்ம திருப்தி அடைவதாகக் கூறினார். ஓயாத உடல் உழைப்பும், வேண்டிய போது கிடைக்கின்ற சிறிய ஓய்வும், எளிய உணவு முறை களும் அவருக்கு மனநிறைவைத் தருகின்றன. தமது காரியங்களை துப்புரவு முதல் பிற சுய தேவை கள் ஈறாக அனைத்தையும் அண்ண லின் வழியில் தானே செய்துவரும் அவர், தமக்கு ஓய்வு ஊதியமாக வரும் எளிய தொகையில் சரி பாதியை தர்ம காரியங்களுக்காக வும் செலவழிக்கிறார், என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. தமது உதவியால் கல்வி பயின்று இன்று உயர்ந்து நிற்கும் பலரைப் பற்றி அவர் எங்களிடம் ஒரு சில சான்றுகளுடன் கூறிய போது அவருடைய தன்னலமற்ற சேவையை எண்ணி எங்களால் வியப்படையாமல் இருக்க முடிய வில்லை.

காந்தி நிகேதன் கல்லுப் பட்டி ரா. குருசாமி அவர்களைப் பற்றி இங்கு குறிப்பிட வேண்டிய இன்னொரு அம்சம் அவர் சட்டையே அணிவதில்லை என்பது தான்! இதற்குக் காரணமாக அவர் கிராமங்களைச் சுட்டிக் காட்டுகிறார்! காலில் செருப்பும் உடலில் சட்டையும் இல்லாமல் நாள் முழுதும் உழைக்கும் ஒரு கிராமத்து மனிதனைத் தன்னை உருவாக்கியிருப்பதில் அவர் மன நிறைவு காண்கின்றார். அண்ணல் சொன்னதைப்போலவே, பாரதத் தில் அத்தனை பேரும் அணிய சட் டையும், காலில் அணிந்து

கொள்ள செருப்பும் பெறுகின்ற காலத்தில் தானும் சட்டை அணிவ தாகக் கூறும் போது அவர் குர லில் தொனித்த உறுதி எங்களை உணர்ச்சி அடையச் செய்து விட்டது!

அவரை மிகவும் கவர்ந்த இலக்கியம் டால்ஸ்டாயின் Resurrection in Jail என்னும் ஒப்பற்ற நூலாகும். டால்ஸ் டாயின் நூல்களில் அண்ணலின் அகிம்சையும் ஒழுக்கமும் மிக அதிகமாக வற்புறுத்தப்படுவதால் டால்ஸ்டாயின் நூல்களை மிகவும் விரும்பிப் படிப்பதாகக் குறிப்பிடு கிருர் இந்தத் தியாகி. டால்ஸ்டாய் மிகப் பெரிய செல் வந்தராய் இருந்தும், மிக எளிய மனிதனுக வாழ்ந்து காட்டியமை ரா. குருசாமி அவர்களை மிகவும் கவர்ந்தமை அவருடைய உரை யாடலில் மிகத் தெளிவாக வெளிப் பட்டது. ''சமுதாயம் கெடு வதற்கு நானே பொறுப்பு'' என்ற டால்ஸ்டாயின் கூற்ருக வெளி வந்த ஒவ்வொரு தனிமனிதனின் வாக்குமூலமும் ரா. குருசாமி அவர்களின் மனதில் மிகப் பெரிய மாற்றங்களை உண்டாக்கி உள் ளன என்பதையும் எங்களால் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

அடுத்து மாணிக்கவாசகரின் பக்தி இலக்கியங்களில் அவரு டைய எண்ணங்களில் லயித்துள் ளன.

இன்று சமுதாயத்திற்கு மிகத் தேவையான பாடம் எது எனக் கேட்டதற்கு, எவ்விதத் தயக்க மும் இன்றி ''Rural Economics'' என்கிருர் அவர். ''கிராமப் பொருளாதாரத்திற்கு நானே சான்ருகவே இருக்கிறேன். கிராமப் பொருளாதாரத் தத் துவத்தை என்னல் மிக நன்ருகப் புரிந்து கொள்ள முடிந்துள்ள தால், என்னுடைய திட்டங்களும், செயல்முறைகளும், மிகச் சிறந்த கிராமப் பொருளாதாரத் திட்ட மாக இருக்க முடியும் என நான் நம்புகிறேன்'' என்று ஆணித்தர மாகக் குறிப்பிடுகிருர் ரா. குருசாமி அவர்கள்.

ரா. குருசாமி அவர்கள் தம் பணிக்காலத்தில் தே. கல்லுப் பட்டி ஆசிரமத்தில் பல அரசு உயர் அதிகாரிகளுக்குப் பயிற்சி அளித்துள்ளார். தேசியப் போராட்டத் திட்டங்கள், மது விலக்குப் பிரச்சாரம், தேசிய நிர் மாணத் திட்டங்கள், கிராம சேவக்குகள் உருவாவதற்கு ஆரம்பத் தளமாக அமைத்தது தே. கல்லுப்பட்டி காந்தி நிகேதன் ஆசிரமமே. அதுபற்றிக் கேட்ட போது அவர்களுக்கு அத் தகைய பயிற்சிகள் இன்றும் தேவையானதாயும், அவசியமான தாயும் தோன்றுகிறது.

பொதுவாக மாவட்ட ஆட்சி யாளர்களும், அதற்கு இணையான பதவியில் உள்ள அலுவலர்களும், கிராமங்களுடன் மிகுந்த தொடர்பு கொண்டவர்களாயும், கிராம மக்களுடன் நெருங்கிப் பழகுபவர் களாயும் இருக்க வேண்டும் என்கிருர் அவர்.

இன்றைய கல்வி முறையில் மிகப் பெரிய மாற்றங்களை விரும்பு கிருர் ரா. குருசாமி அவர்கள்! குழந்தைகளிடம் இயற்கை யாகவே அமைந்துள்ள அழிக்கும் ஆற்றலை, ஆக்கும் ஆற்றலாக மாற்ற வேண்டியதன் அவ

சியத்தை விளக்குகிருர் அவர். இதுவே இன்றைய கல்வி முறையின் அடிப்படையாகவும் இருக்க வேண்டும் எனவும் அவர் விழைகின்ருர். இன்றைய கல்விமுறை, மாணவர்களை அலுவலகங்களில் உட்கார்ந்து எழுதப் பயிற்சியளிக்கும் தன்மையாக உள்ளது. ஒவ்வொரு மாணவனையும் எதிர்காலத்தில் எதையாவது உருவாக்கும் சிற்பியாக மாற்றப்படுவதாகக் கல்விமுறை அமையவேண்டும் என்பது அவரது கருத்து.

''காந்தியைச் சமுதாயம் மறந்து கொண்டு வருகிறதே'' என நாங்கள் வருந்திக் கூறிய போது, ''அண்ணலைப் பற்றித் தெரியாதவர்கள் அநேகர். ஆனால் உலகத் தலைவர்கள் அண்ணலை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிருர்கள் என்பதை எவராலும் மறுக்க இயலாது! ''உன் எதிரியை, உன்னைவிட நீ அதிகம் நேசிக்க வேண்டும்'' என்று, உலகில் வேறு எந்தத் தலைவரும் அவதாரப் புருஷனும் சொல்லாத உயர்ந்த தத்துவத்தை விட்டுச் சென்றவர் மகாத்மா காந்தி ஒருவர் தான்! இன்று உலகில் எல்லாவற்றிற்கும் உள்ள ஒரே வழி காந்திய வழி தான் என்று, உலகத்து சிந்தனையாளர்கள் ஏக மனதாக ஏற்றுக் கொண்டுள்ளார்கள்'' என பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.

தமிழகத்தில் இயங்குகின்ற 52 சங்கங்களும் அதிக இலாபத்தை ஈட்டி வருகின்றன எனமகிழ்வுடன் பாராட்டும் அவர், இவற்றின் செயல் முறைகளில் தோன்றும் ஒருசில குறைபாடுகளையும் குறிப்பிடுகிருர். பதவி ஆசை வர வர அதிகமாகி வருவதைச் சுட்டிக் காட்டும் அவர், சர்வோதய அன்பர்களிடம் தொண்டு செய்யும் உணர்வே மேலோங்கி இருக்க வேண்டும் எனக் குறிப்பிட்டுக் கோடு காட்டுகின்ருர். அத்துடன், சர்வோதய சேவை இன்னும் அதிக அளவில் கிராமங்களின் மூலை முடுக்குகளில் எல்லாம் விரைந்து பரவிச் செயல்பட வேண்டும் எனவும் அவர் விரும்புகிருர்.

மதுவிலக்கைப் பற்றிக் கேட்ட போது அதற்கு அவருடைய விளக்கம் அனைவராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகவும், சிந்திக்கத்தக்கதாகவும் அமைந்திருந்தது! இன்றைய அரசு ஊழியர் எனப்படும் வெள்ளைச் சட்டைக் காரர்களுக்குத் தீனி போட்டுப் போட்டுத் தான் மதுவிலக்கைத் தளர்த்துதல் போன்ற வழிகளை அரசாங்கம் கையாள வேண்டியுள்ளது என அவர் குறிப்பிட்ட போது அதை மறுக்காமல் இருக்க முடியவில்லை. ஆம்! வரவு செலவு திட்டத்தைப் பரிசீலித்துப் பார்க்கும் போது, மதுவிலக்கைத் தளர்த்துதல் தவிர்க்க இயலாத ஒன்ருகவே தென்படுகிறது! எனவே, தனிமனிதன் தீமைகளை உணர்ந்து, மதுவை ஒதுக்கிவிட்டு நல்வாழ்வைந் தேடினுல் மட்டுமே, மதுவரக்கியிடம் இருந்து தப்பித்து விடலாமே அன்றி, அரசாங்கத்தை இதைக் காரணமாகக் காட்டி குறை கூறுவதால் எப்பயனும் இல்லை என்கிருர் அவர்.

இந்தியா விடுதலை பெற்று 34 ஆண்டுகள் ஆகியும் நமது கிராமங்கள் முழுவளர்ச்சி பெருமைக்கான காரணம் கேட்ட போது, இன்றைய பொருளா

தாரத் திட்டங்களைச் சாடினர் அவர்! ஒரே வரியில் ''கிராமங்கள் இன்றும் படுமோசமான நிலையை அடையப் போகின்றன! இன்னும் பதினைந்து ஆண்டுகளில் பாரதத்தில் உள்ள எல்லா கிராமங்களும் அழிந்தே போகப் போகின்றன என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறுகிருர்!

கதர் ஊழியர்களின் வாணிகம் கிராமங்களில் நடைபெற வேண்டும். கதர், கிராமக் கைத்தொழில்களின் பொருட்களும், பயன்களும், கிராமங்களுக்குத் திருப்பிவிடப்பட வேண்டும்! அப்போதுதான் கிராமங்களால் அவற்றின் சுய தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியும்'' எனக் கதர் ஊழியர்களுக்குத் தமது அறிவுரைகளாக வடிக்கிருர் ரா. குருசாமி அவர்கள். தொழில்களும், பிற செயலாக்கத் திட்டங்களும், கிராம மக்களின் தேவைகளையே அடிப்படையாகக் கொண்டவையாக இருக்க வேண்டும் என விரும்புகிருர் அவர்.

ரா. குருசாமி அவர்களின் மனதைக் கவர்ந்த தலைவர்கள் அண்ணலும் விநோபாவும்.

சர்வோதயம் ஆசிரியர் வெ. இராமச்சந்திரன் அவர்களைப் பற்றிய அவருடைய எண்ணங்கள் சர்வோதயம் இதழுக்கு மேன்மேலும் பெருமை சேர்ப்பவையாக அமைந்தன. நல்ல சிந்தனையும், எதையும் தெளிவுபடச் செய்யும் ஆற்றலும், எதார்த்தமான பண்பாடும், சத்தியத்திலும், உழைப்பிலும் வைத்துள்ள நம்பிக்கையும் வி. ஆர். அவர்களை மிகச் சிறந்த தலைவராக உருவாக்கியுள்ளன என்கிருர் அவர்.

## நல்வாழ்வு

டாக்டர்களின் நல்வாழ்வு
நோயாளிகளின்
எண்ணிக்கையைப் பொறுத்தது.
வக்கீலின் நல்வாழ்வு
குற்றவாளிகளின்
எண்ணிக்கையைப் பொறுத்தது.
அரசியல்வாதிகளின் நல்வாழ்வு
ஏமாளி மக்களின்
எண்ணிக்கையைப் பொறுத்தது.
நம் நாட்டில்
டாக்டர்களும் வக்கீல்களும்
அரசியல்வாதிகளும்
மிக நன்ருகவே வாழ்கிருர்கள்.

— வ. தேனப்பன்

அவர் மேற்பார்வையில் வெளிவரும் தமிழ் மாத இதழாகிய சர்வோதயம் இன்னும் புதுப் பொலிவுகளுடன் வெளிவர வாழ்த்தும் அவர், காந்தியச் சிந்தனைகள் எளிய வாசகர்களை முழுமையாகச் சென்றடைய வேண்டுமாயின் கட்டுரைகள் மிக மிகச் சுருக்கமாக அமைய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிருர். இது காந்திய எழுத்தாளர்களுக்கு அவர் அளித்த அறிவுரையாக அமைந்திருந்தது.

கல்லுப்பட்டி காந்தி நிகேதன் ஆசிரம ரா. குருசாமி அவர்களைப் பேட்டி காணும் போது அவரின் வாழ்வும், வாக்கும் அவர் ஒரு காந்தி வீரர் என்பதையே பறை சாற்றின.

● ●

— ஆவிளங்கண்ணன்

— அழகுதாசன்




புதுக்கவிதை ஒரு பார்வை

- ஆசிரியர் : இல. செ. கந்தசாமி எம். ஏ.,
- வெளியீடு : கலைச்செல்வம் பதிப்பகம், கோவை-41.
- விலை : ரூ. 5-00

''புதுக் கவிதைகளுக்கு என மரபுகள் படிகின்ற வரை பொறுத்திருந்தே ஆக வேண்டும். செடிகளாக வளரும்போதே அவற்றைக் கிள்ளிவிடாமல், மரங்களாக வளர விட்டு தேவையில்லாத கிளைகளையும், கொம்புகளையும் தறித்து விடுவோமானால் நல்ல பலன் தரும் தோப்பு ஒன்று உருவாகும் என்பதில் ஐயமில்லை!'' என, புதுக் கவிஞர்களை வரவேற்கவும் முடியாமல், ஒதுக்கி விடவும் இயலாமல் இந்நூலில் Commitments ஏதும் இன்றி புதுக்கவிஞர்களை ''வேடிக்கை'' பார்த்திருக்கிறார், ஆசிரியர். ஆனால், அவர் பார்த்துள்ள 14 கவிதைகளின் எண்ணங்களை நோக்கும்போது, உளமார புதுக்கவிதைகளை ரசித்துள்ளார் என்பதை மறுக்க இயலாது.

''அம்மா;
என்
பிஞ்சு வயது பிரபஞ்சமே!
எனக்கு நீ உலகமாகவும்
உனக்கு நான் உலகமாகவும்
இருந்த காலங்கள்......''

''வறுமையே !
எங்கள் தேசத்து
அரசியல் வாதிகள்
வாங்கி வந்த
வரப்பிரசாதமே''

''ஐயா பசி'' எனும் நம் தேசிய கீதத்தை நாளொன்றுக்கு ஆயிரத் தெட்டுத்தடவைகள் ஜெபித்ததால் கருப்பன் நாக்கில் நாமகள் குடி கொண்டாள்''

இவையெல்லாம் ஆசிரியரின் தேர்ந்தெடுத்த முத்துகள். ஆசிரியர் இந்த நூலைப் பிரசவிக்க எடுத்த காலம் மிக நீண்டது என அவர் தேர்ந்தெடுத்துள்ள கவிதைகள் மிகத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. பொதுவாகப் புதுக்கவிஞர்கள் சமுதாயத்தின் இருண்ட பகுதியில் வாசம் செய்பவர்களோ என்ற எண்ணமே நூலின் முடிவில் ஏற்படுகின்றது.

ஆசிரியரின் பார்வை, பெரும்பான்மையும் கவிதைகளுக்கு அவர் அளிக்க முனைந்துள்ள சொந்த விமர்சனங்களாகத் தென்படுகின்றதே அன்றி, ஒரு நல்ல விமர்சனமாகத் தென்படவில்லை என்பதையும் இங்குக் குறிப்பிட்டே ஆக வேண்டும். சக்திக்கனலையும், வைரமுத்துவையும், பிச்சமூர்த்தியையும் பார்த்த கம்பீரப் பார்வையையே, ஜெகநாத ராஜாவுக்கும் மீராவுக்கும் கொடுத்திருக்க வேண்டியதில்லை; அல்லது, பின் கூறிய இருவரின்

இன்னும் சில ஆழமான கவிதையையாவது தேர்ந்தெடுத்திருக்கலாம்.

புதுக்கவிதைகள் புரியவில்லை என மருண்டு நிற்பவர்களுக்கு வெளிச்சம் காட்டும் புதிய உத்தியாக நூல் அமைந்துள்ளது எனச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

— "கே. ஜி. கே"

"இதுவோ நாகரிகம்?"

- ஆசிரியர் : இல. செ. கந்தசாமி எம். ஏ.,
- வெளியீடு : கலைச்செல்வம் பதிப்பகம், கோவை-41.
- விலை : ரூ. 4-50

நாகரிகம் என்ற பெயரில் சமுதாயத்தில் நிகழும் காட்டுமிராண்டித்தனத்தைச் சாடியும், நையாண்டி செய்தும் இயற்றப்பட்ட கட்டுரைகளின் அழகிய தொகுப்பு.

தங்கள் குழந்தைகளின் மீது கவனமற்ற பெற்றோர், தான்தோன்றித்தனமான மனிதனின் உணவு முறைகள், உழைக்காத நகரத்துச் சோம்பேறிகள், நன்றியற்றவர்களின் நாய்த்தன்மை, அரசியல்வாதிகளின் ஆற்றாமை போன்ற இழிமைகளை ஆசிரியர் மிக நன்றாகவே சாடியிருக்கிறார்.

"எந்த ஒரு காகிதமும் தகுந்த காரணமில்லாமல் 48 மணி நேரத்திற்கு மேல் எந்த ஒரு குமாஸ்தா, அதிகாரியிடம் இருந்தாலும் தகுந்த தண்டனை விதிக்கப்படும்" என்ற திட்டம் நிறைவேற்றினால் பொது மக்கள் லஞ்சம் கொடுப்பது இருக்காது என்ற கருத்தை ஆணித்தரமாக வலியுறுத்துகிறார்.

## சொந்தங்கள்

*உழைத்து வரும் களைப்பு*
*கூழ் குடியனுக்குச் சொந்தம்*
*உண்டு வரும் களைப்பு*
*மெத்தை மாடிகளுக்குச் சொந்தம்*
*அனுபவித்து வரும் களைப்பு*
*படுக்கை வீரர்களுக்குச் சொந்தம்*
*பயந்துவரும் களைப்பு*
*நெஞ்சில் உரமில்லார்க்குச் சொந்தம்*
*பொருளாதாரத்தினால் வரும் களைப்பு*
*இந்தியாவின் பாரம்பரியச் சொந்தம்.*

— திருநின்றவூர் ஸ்ரீதரன்

எனினும், புதியதொரு குறைபாடற்ற சமுதாயத்தைக் காண ஏங்கும் எழுத்தாளனின் மன உளைச்சல்கள் நூலில் விரவிக் காணப்படுகின்றன. கருத்துக்களும் துண்டாக தலைப்புகளில் சுருங்கிய செய்திகளாக அமைந்துள்ளமை ஆசிரியரின் எழுத்தாற்றலுக்குச் சான்று பகர்கின்றன.

சர்வோதயம் இதழில் வந்து வாசகர்களைக் கவர்ந்த கட்டுரைகள் இவை! அந்த நன்றியை முன்னுரையில் ஒரு வரி சேர்த்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்! மொத்தத்தில் இது ஒரு நல்ல நூல்.

— "ஆவிளங்கண்ணன்"

# உலகில் இருபெரும் மாநகரங்கள்!

கி. பி. 2000 ஆண்டு வர இன்னும் 19 ஆண்டுகளே உள்ளன. இன்று வளரும் நாடுகளின் நகரங்கள் வளரும் வேகத்தைக் கொண்டு கணக்கிட்டால், இந்த 19 ஆண்டுகளில் உலகிலேயே இன்றுள்ள மூன்று மாநகரங்களே, மாநகரங்களாக எஞ்சியிருக்க முடியும். அவை, 1) டோக்கியோ 2) நியூயார்க் 3) லாஸ் ஏஞ்செல்ஸ்

### வளர்ந்த நாடுகளில் எட்டு

1975-ஆம் ஆண்டில் உலகிலேயே மிகப் பெரிய எட்டு மாநகரங்கள் வளர்ந்த நாடுகளில் இருந்தன. 2000 ஆண்டுக்குள் மூன்றே நகரங்கள் இந்த வரிசையில் நீடித்திருக்கும். இவ்வாறு தற்கால பிரச்சினைகள் பற்றி ஆராயும் அமெரிக்க நகர் கொலம்பசிலிருக்கும் ஆய்வு நிறுவனத்தின் இயக்குநர் திரு. ரால்ப் விட்னர் அறிவிக்கிறுர். (Mr. Ralph Widner of Academy for Contemporary Problems) அவர் சர்வதேச ஸ்தல ஸ்தாபன நிறுவனங்களின் அனைத்துலக மாநாட்டில் பேசுகையில் பின்வருமாறு கூறினுர். மாநாட்டுத் தலைவர் திரு. டாம் மூடி கொலம்பஸ் மாநகரின் மேயராக இருந்து வருகிறுர் என்பது குறிப்பிடத்தக்கது.

### ஐம் பெருநகரங்கள்

இந்த நூற்ருண்டு முடியும் தருவாயில் உலகிலேயே மிகப் பெரிய நகரங்கள் ஐந்து இருக்கும். அவை முறையே 1) மெக்சிகோசிடி 2) டோக்கியோ 3) ஹாங்காங் 4) நியூயார்க் 5) சுவோபோலோ (பிரேஜில்) இவ்வனைத்து நகரங்களிலும் 2 கோடி மக்கள் அப்பொழுது வாழ்ந்து வருவார்கள் என்று ஐக்கிய நாட்டு சபையின் கணிதப்படி கணக்கிடப்பட்டுள்ளது.

### நகரமும் கிராமமும் சேர்ந்து வளர வேண்டும்

ஐந்து நாட்கள் சுமார் 53 நாடுகளிலிருந்து வந்திருந்த 800-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் கொண்ட வீட்டு வசதிகள் பற்றிய கருத்தரங்கில் திரு. விட்னர் பேசுகையில் அனைத்து நாடுகளும் கிராமங்களையும், நகரங்களையும்- ஒரே சீராக வளரும்படி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

### குப்பங்களை அகற்ற முடியாது

சென்ற காலத்தில் குப்பங்களும், தெருவாழ் மக்களும் வாழும் பகுதிகளை நகரங்களிலிருந்து அகற்றுவதே நகர வளர்ச்சிக்குச் சிறந்த வழி என்று எண்ணியிருந்தார்கள். அவை நகர வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதாக அன்று எண்ணி வந்தார்கள். இந்தக் குப்பங்கள் ஜன நெரிசலை ஒரு பகுதியிலிருந்து, மற்ருெரு பகுதிக்கு மாற்றி விடுகிறது. இந்தக் கருத்தை இனி அமல் நடத்த முடியாது. ஏனெனில் குப்பங்கள் இப்பொழுது மூன்ரும் உலகில் வளரும் நாடுகளில் மொத்த நகர மக்கள் பெருகும் வேகத்தைவிட இருமடங்கு அதிக வேகத்தில் பெருகி வளர்ந்து வருகின்றன.

## நாதி ஏது?

தேர்க்கால் இடைப்புகுந்திறந்த
கன்றுக்காக
அன்று
நீதி விசாரணை
நடந்தது,
அரசு
பேருந்துகளில்
அகப்பட்டு
இன்று
எத்தனையோ உயிர்கள்
செத்துப் போகின்றன
நீதி பேச இங்கே
நாதி ஏது?

— குடியாத்தம் குமளன்

### குப்ப வாழ் மக்களுக்கு அங்குள்ள தலைவர்களே வழிகாட்டுவார்கள்

இந்தக் குப்ப சீர்திருத்தங்களுக்கு இன்று அங்கு வாழ்ந்து வரும் தலைவர்களை பயன்படுத்தி அவர்களது உற்சாகம், ஆற்றல் முழுவதையும், குப்பங்களை சீர்திருத்துவதற்கு பயன்படுத்தலாம் என்று திரு. விட்னர் ஆலோசனை தெரிவித்திருக்கிறார்.

### ஒரு மாபெரும் பிரச்சினை குடியிருப்பு

மாநாட்டில் கலந்து கொண்ட பல நகரசபைத் தலைவர்கள் வருங்கால நெருக்கடிகளில் ஒன்று நகர வாழ் பெருமக்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பதே என்று தெரிவித்தார்கள்.

தொழில்கள் செய்ய விசை தட்டுப்பாடு அதிகரிக்கும். இன்று கிடைப்பதை விட குடிதண்ணீர் பற்றுக்குறை பெருகும். போக்குவரத்து செலவு மிகுதியாகும்.

### தண்ணீர் தட்டுப்பாடுதான் தடை!

சவூதி அரேபிய உள்நாட்டு இலாகாவின் கிராமிய வளர்ச்சிப் பகுதி தலைவர் திரு. முகம்மது பஃசல் அல் சுவை பேசுகையில் கிராமிய வளர்ச்சிக்கு பணம் தட்டுப்படாது. ஆனால் தண்ணீர் தட்டுப்பாடு தீராது என்று கூறினார்.

### நடுத்தர வகுப்பினர்களின் நடுநகரப் பிரச்சினை

''ஆஸ்திரேலியாவின் பெரும் தலைவலி சிட்னி மாநகரின் குடியிருப்பு பிரச்சினையே. ஆனால் குப்பங்களே இல்லாத சிட்னி மாநகரில் பிரச்சினையனைத்தும், குப்பம்வாழ் மக்களது புனர்வாழ்வு பிரச்சினையல்ல. ஆனால் நகரின் மையத்தில் வாழ்கின்ற குறைந்த வருவாய் படைத்த நடுத்தர வகுப்பினர்களும் நடுத்தர வருமானம் படைத்த நடுத்தர வகுப்பினரும் வாழ்வதற்கு வீட்டு வசதியில்லாது தவிப்பதே பெரும் பிரச்சினை'' இவ்வாறு சிட்னி மாநகர மேயர் திரு. டக்ளஸ் டப்ளியூ சதர்லாந்து கூறினார்.



## சுதந்திரம்

இருட்டில் இருந்த
குற்றங்குறைகளை
மேடு பள்ளங்களை
வெளிச்சத்தில்
காண்பதே-ஒழிய
தீர்ப்பதல்ல சுதந்திரம்.

— திருநின்றவூர் ஸ்ரீதரன்



# பாரதியின் பக்தி

குமரப்பாதாசன்

மகாகவி பாரதியார் இறைவனிடம் ஈடு இணையற்ற பக்தி கொண்டவர். புதுமைக்கும் புதுமை செய்யப் புரட்சிக்கும் வாழ்த்துக் கூறிய பாரதியாரின் நெஞ்சில் பழமைக்கும் பழமையான பக்தி மரபு வழியில் பயிராகி செழித்து வளர்ந்திருந்தது.

பாட்டுக்கொரு புலவரான பாரதியின் பக்தி மூடத்தனமானதல்ல. கண்மூடிப் பழக்க வழக்கங்களையும், சடங்குகளையும் போற்றி வளர்க்கின்ற பக்தியைப் பாரதியார் ஏற்கவில்லை.

பாரதியாரின் பக்தி அகத்தில் மலர்ந்து மணம் பரப்புகின்ற உள்ளார்ந்த பக்தி. உள்ளத்தில் உள்ள பக்தியைப் புறக் கோலங்களில் காட்டுவதை விரும்பாதவர் பாரதியார்.

மகாகவிக்கு பக்தி ஓர் ஆன்மீக வெளிப்பாடு. இறை நம்பிக்கையின் விளைவே அவரிடம் பக்தியாகக் கனிந்தது. அந்தப் பக்தி அவரிடம் பாடல்களாக வெளிப்பட்டது.

பாரதியார் இறைவனையோ பக்தியையோ ஒரு குறுகிய எல்லைக்குள் - வட்டத்திற்குள் முடக்க விரும்பவில்லை. பக்தியின் மூலம் வரையறை கடந்து விரியும் உலகோடு இரண்டறக் கலந்துவிட விரும்பியவர் பாரதியார். ஆதலால் அவரது பக்தி குறிக்கோள் உடையது; சமுதாய நோக்கம் உடையது; நம்பிக்கையோடு இந்த மண்ணுலகில் வாழ வைப்பது. தனி வகையான அவரது பக்தியை அறிந்து கொள்வது நமக்கு வழி காட்டுவதாக அமையும்.

## பக்திக்கு அடிப்படை

மகாகவி பாரதியார் எல்லாம் வல்ல, உள்ளும் புறமுமாய் ஒளிர்கின்ற, எல்லாம் கடந்த மெய்ப்பொருளை, சக்தியை நம்பியவர். இறைவனின் பெயர்களைப் பற்றிக் கவலைப்படாதவர். இறைவனின் இயல்புகளைப் போற்றிப் புகழவும், அதனிடம் தன்னை ஆட்படுத்திக் கொள்ளவும் விழைந்து முயன்றவர்.

பாரதியார் 'யாதுமாகி நின்ற' 'எங்கும் நிறைந்த' 'விண்ணும் மண்ணும் தனியாளும்' சக்தியை வழிபட்டார் அவர்.

''சொல்லினுக் கரியனுய்ச்
சூழ்ச்சிக் கரியனுய்ப்
பல்லுரு வாகிப் படர்ந்தவான்
பொருளே,
உள்ளுயி ராகி உலகங் காக்கும்
சக்தியே தானுந் தனிச்சுடர்ப்
பொருளே'' என்றும்,

''இறைவி இறைவன் இரண்டும்
ஒன்ருகித்
தாயாய் தந்தையாய் சக்தியும்
சிவனுமாய்
உள்ளொளி யாகி உலகெலாந்
திகழும்
பரம்பொரு ளேயோ! பரம்பொரு
ளேயோ!
ஆதிமூலமே! அனைத்தையும்
காக்கும்
தேவ தேவா! சிவனே! கண்ணு

ஆணுய் பெண்ணுய் அலியாய்,
உள்ளது
யாதுமாய் விளங்கும் இயற்கைத்
தெய்வமே!
வேதச் சுடரே! மெய்யாங்
கடவுளே!''

என்றும் இறைவனைப் பற்றிக் கூறுவது சிந்தனைக்குரியது. இறைமையை எப்படி எல்லாம் உணர்ந்தாரோ, அதனை அப்படியே பாடுகின்ருர்.

தன்னை வணங்கவே இறைவன் நம்மைப் படைத்தான் என்று கருதுவது நமது சமய மரபு. இந்த வழியிலேயே பாரதியாரும்,

''எண்ணிற் கடங்காமல் எங்கும்
பரந்தனவாய்
விண்ணிற் சுடர்கின்ற மீனை
யெல்லாம்—பண்ணியதோர்.
சக்தியே நம்மைச்
சமைத்ததுகாண், நூருண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு''
என்று கூறுகின்ருர்.

## எது பக்தி?

மகாகவி பாரதியார் இறைவனிடம் முழுக்கச் சரணமடைதலையே பக்தி நிலையாகக் கருதுகின்ருர். ''நீயே சரணம் நினதருளே சரணஞ் சரணம்'', என்று கூவுகின்ருர். இதனை அவர் ''தேச முத்துமாரி'', பாடலில்

''தேடியுனைச் சரணடைந்தேன்,
தேச முத்து மாரி!
கேடதனை நீக்கிடுவாய்,
கேட்டவரந் தருவாய்.
பாடியுனைச் சரணடைந்தேன்,
பாசமெல்லாங் களைவாய்;
கோடிநலஞ் செய்திடுவாய்,
குறைகளெல்லாந் தீர்ப்பாய்.
நம்பினுர் கெடுவதில்லை;
நான்குமறைத் தீர்ப்பு!
அம்பிகையைச் சரண்புகுந்தால்
அதிகவரம் பெறலாம்'',

என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

பக்தி வழியில் செல்பவர்கள் நடப்பவற்றை அப்படியே ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் பெற வேண்டும். எது நடந்தாலும் இறைவனின் சித்தப்படி நடைபெறுகின்றதென்ற தெளிவு இருந்தால்தான் வெறுப்போ, விருப்போ இன்றி இறைவனிடம் பக்தி செலுத்த முடியும். மகா கவி பாரதியார் மனத்திற்குக் கட்டளை இடுவது போல,

''தலையிலடி விழுந்தால் சஞ்சலப்
படாதே;
எது நிகழினும் 'நமக்கேன்'?
என்றிரு;
பராசக்தி யுளத்தின் படியுலகம்
நிகழும்;
நமக்கேன் பொறுப்பு? என்று

கூறுவது பக்தர்கள் உணரத்தக்கதாகும்.

இறைவன் வெளிப்படை யாகத் தெரிகின்ற துணையல்ல. தோன்றாத் துணையாக இருப்பவன். ''எல்லாம் அவன் செயல்'', என்ற நம்பிக்கையோடு பக்தர்கள் செயல்படுகின்ற பொழுது பக்தி கர்ம யோகமாக மலர்கின்றது.

### பக்தியின் இயல்பு

உள்ளொளி பெருக்குவது பக்தி. அதனை உள்ளத்தில் பயிர் செய்ய முயற்சியும், பயிற்சியும் தேவை. இறையுணர்வு வாழ்க்கையை ஊடுருவி நிற்கின்ற பொழுது வாழ்க்கையின் நோக்கிலும் போக்கிலும் மாற்றங்கள் ஏற்படும்.

'நான்' என்னும் ஆணவம் கரைகின்ற பொழுது, வருகின்ற நல்லதையும் கெட்டதையும் ஒன்று போல் ஏற்க இறை நம்பிக்கைத் துணை நிற்கின்ற பொழுது பக்தி யுடையவர்கள் செய்யும் செயல்களில் பக்தியின் ஒளிவீச்சைக் காணலாம். இதனை அருமையாக

''பக்தி யுடையார் காரியத்திற்
பதறார்! மிகுந்த பொறுமை
யுடன்
வித்து முளைக்குந் தன்மைபோல்
மெல்லச் செய்து பயனடைவார்
சக்தி தொழிலே அனைத்துமெனிற்
சார்ந்த நமக்குச் சஞ்சலமேன்?
வித்தைக் கிறைவா! கணநாதா!
மேன்மைத் தொழிலிற்
பணியெனையே'',

என்று கூறுகின்றார்.

### பக்தன் கேட்பது

இறைவனை தாழ்ந்து அடி பணிந்து பக்தர்கள் வழிபடுகின்றார்கள். அப்பொழுது தங்களுக்கு வேண்டியதை எல்லாம் இறைவனிடம் விண்ணப்பிக்கின்ற-முறையிடுகின்ற-வழக்கம் பக்தர்களிடம் இருக்கின்றது.

''இறைவன் அன்னையாக, அப்பனாக இருப்பவன். நமக்கு என்ன வேண்டும் என்று அவனுக்குத் தெரியாதா? ஒரு பிள்ளை கேட்டா பெற்ற தாய் தர வேண்டும்? பிள்ளையின் முகம் பார்த்து, தேவையை உணர்ந்து, பரிந்து, பாலூட்டும் தாய் போல இருக்கும் இறைவன் கேட்காமலே நமக்கு வேண்டியவற்றைத் தர மாட்டானா?'' என்று கேட்பவர்கள் இருக்கின்றனர்.

''அழுதபிள்ளை தானே பால் குடிக்கும்? கேட்டால் தானே கிடைக்கும்! 'தட்டுங்கள் திறக்கப்படும்; கேளுங்கள் கொடுக்கப்படும்' என்று தானே சமயங்கள் கூறுகின்றன? பெற்றவர்களிடம் உரிமையோடு பிள்ளை கேட்கலா

**சுமை**

பெண் பெற்ற
பாவியரே—நீர்
முன் செய்த
பாபத்தின்
ஊதியமாய்
உமது
முதுகில்-இன்று
வரதட்சணை
என்னும்-சுமை
முட்டைகள்
ஏற்றப்பட்டுள்ளனவோ?

— குடியாத்தம் குமணன்

மல்லவா!'' என்று கூறுபவர்கள் உள்ளனர்.

பொதுவாக உலகியலில் சிக்கி உழல்பவர்கள் பக்தியின் பெயரால் கோவிலுக்குச் சென்று, தனக்கும், தனது குடும்பத்திற்கும் 'இது வேண்டும் அது வேண்டும்' என்று முடிவற்ற பட்டியல் போடுகின்றனர். இது பல வேளைகளில் ''பக்தி வாணிபமாக'' மாறுகின்றதே தவிர ''பக்தி என்னும் முக்தி'' நிலைக்கு அழைத்துச் செல்வதில்லை.

மகாகவி பாரதியார் தனி வகைப் பக்தராக விளங்கினர். ஆதலால் அவர் இறைவனிடம் கேட்டவை, மற்றவர்கள் கேட்பவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டவைகளாக இருந்தன. தனக்காக அவர் இறைவனிடம் தன்னலத்தோடு எதுவும் கேட்கவில்லை. அவர் கேட்டவை எல்லாம் பொதுநல நோக்கில் தான்.

மகாகவி இறைவனிடம் கேட்பவற்றை இரு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று, அவர் அவருக்காகக் கேட்பது போலக் கேட்டவை. மற்றென்று, அவர் மண்ணுலகில் வாழ்கின்ற மற்றவர்களுக்காக, மற்றைய உயிரினங்களுக்காக வேண்டியவை.

பாரதியார் தனக்கு இறைவன் எவற்றைத் தர வேண்டும் என்பதை,

''எனக்கு வேண்டும் வரங்களை
இசைப்பேன் கேளாய் கணபதி!
மனத்திற் சலன மில்லாமல்,
மதியில் இருளே தோன்ருமல்
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந்திட நீ செயல்
வேண்டும்,
கனக்குஞ் செல்வம், நூறுவயது,
இவையும் தாநீ கடவாயே''
என்றும்,

''உனக்கேஎன் ஆவியும்
உள்ளமும் தந்தேன்
மனக்கேதம் யாவினையும் மாற்றி-
(எனக்கே நீ)
நீண்ட புகழ் வாணாள்
நிறைசெல்வம் பேரழகு
வேண்டுமட்டும் ஈவாய்
விரைந்து''

என்றும் கூறுகின்ருர். இங்கு பாரதியார் 'கனக்குஞ் செல்வம்' 'நிறை செல்வம்' என்று கேட்பவை வெறும் அழிகின்ற பொன்னும், மணியும், பொருளும் அல்ல. அவை அழியாத அகச் செல்வங்கள்.

மகாகவியின் 'வேண்டுதல்' அவரது சுயசரிதையில் நன்கு வெளிப்படுகின்றது. அவர்,

''அறிவிலே தெளிவு,
நெஞ்சிலே உறுதி,
அகத்திலே அன்பினேர்
வெள்ளம்,
பொறிகளின் மீது தனியரசாணை
பொழுதெலாம் நினது
பேரருளின்
நெறியிலே நாட்டம், கரும
யோகத்தில்
நிலைத்திடல் என்றிவை
யருளாய்
குறிகுண மேதும் இல்லதாய்
அனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம்
பொருளே'',

என்று கூறுவதிலிருந்து அவர் கேட்பவற்றின் பெருமையையும், சிறப்பினையும் அறியலாம்.

அவரது பக்திப் பாடல்களில் எல்லாம் மேலோங்கி இருக்கும் 'முறையீடுகள்' பொது நலம் வேண்டுபவைகளாகும். அவர் ஒரு கவியுள்ளத்தோடு கேட்கும் பண்பு மிகவும் உயர்ந்ததாகும். அவர் தான் கேட்கும் வரத்தினை,

''பேசாப் பொருளைப் பேசநான்
துணிந்தேன்,
கேட்கா வரத்தைக் கேட்கநான்
துணிந்தேன்!
மண்மீதுள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு,
மரங்கள்;
யாவுமென் வினையால் இடும்பை
தீர்ந்தே,
இன்பமுற் றன்புடன் இணங்கி
வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும், தேவ
தேவா!
ஞான காசத்து நடுவே நின்று
நான்
'பூமண்ட லத்திலே அன்பும்
பொறையும்
விளங்குக; துன்பமும், மிடிமை
யும், நோவும்
சாவும் நீங்கிச் சார்ந்தபல்
லுயிரெல்லாம்
இன்புற்று வாழ்க' என்பேன்!
இதனை நீ
திருச்செவி கொண்டு திருவுளம்
இரங்கி,
'அங்ஙனே யாகுக' என்பாய்
ஐயனே!
இந்நாள் இப்பொழு தெனக்கிவ்
வரத்தினை அருள்வாய்;
ஆதிமூலமே!''

என்று கூறுகின்ற பொழுது நம்மால் மெய்சிலிர்க்க வணங்காமல் இருக்க இயலாது.

அவர் சிவசக்தியிடம் வேண்டுகின்ற பொழுது,

''நின்னருள் வேண்டுகின்றோம்—
எங்கள்
நீதியுந் தர்மமும்நிலைப்பதற்கே'',

என்று குறிப்பிடுவது அவரது பக்தியின் நோக்கத்தை காட்டுகின்றது.

மகாகவி பாரதியார் தனது வாழ்க்கையின் குறிக்கோளை துல்லியமாக உணர்ந்து வகுத்துக் கொண்டவர். தான் மூன்று தொழில்களைச் செய்ய வேண்டுமென்றும், அதற்கு இறையருள் கிட்ட வேண்டுமென்றும் கேட்டு, சிந்தைக்கு ஆணையிடும் வகையில்,

''நமக்குத் தொழில்கவிதை,
நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதுஞ் சோரா
திருத்தல்-உமைக்கினிய
மைந்தன் கணநாதன்
நங்குடியை வாழ்விப்பான்!
சிந்தையே, இம்மூன்றும்
செய்!''

என்று உரைக்கும் வரிகளில் அவரது சிந்தை ஒளிர்கின்றது.

சுடர்மிகும் அறிவுடன் சக்தி தன்னைப் படைத்திருப்பதாக உணர்ந்த பாரதியார்,

''வல்லமை தாராயோ, இந்த
மாநிலம் பயனுற
வாழ்வதற்கே?
சொல்லடி, சிவசக்தி-நிலச்
சுமையென வாழ்ந்திடப்
புரிகுவையோ?''

என்று இறைவனையே கேள்வி கேட்பதிலிருந்து அவரை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது.

இறைவன் நமக்கு மனத்தைக் கொடுத்திருக்கிருன். நமக்குள்ளும் புறமுமாகப் பரவியிருக்கின்ற மனம்தான் நமது உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாகின்றது.

இந்த மனம் ஒருபுரியாத புதிர். ஆதலால்தான் இதனைக் 'குரங்கு' என்ருர்கள். மனத்தைக் கட்டாமல் தன்னைக் கட்ட முடியாது. தன்னைக் கட்டாமல் தன்னலத்தைக் கலைக்க இயலாது. பக்தியின் சிறப்பு மனத்தைக் கட்டுப்படுத்துவதாகும்.

பக்தி மனத்தில் சேரும் குப்பை கூளங்களான பொருமை, பேராசை, போன்றவற்றை அகற்றுகின்றது. அகந்தை என்னும் இருளைப்போக்கும் ஒளிவிளக்காக பக்தி திகழ்கின்றது.

மகாகவி பாரதியார் பக்தியால் என்னென்ன விளையும் என்பதை,

''உட்செவி திறக்கும்; அகக்கண்
ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை
வலியுறும்;
திக்கெல்லாம் வென்றுஜயக்கொடி
நாட்டலாம்;
கட்செவி தன்னைக் கையிலே
எடுக்கலாம்;
விடத்தையும் நோவையும் வெம்
பகை யதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலா
திங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற்
ரேங்கலாம்;
அச்சந் தீரும், அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி
ஓங்கும்;
அமரத் தன்மையும் எய்தவும்
இங்குநாம் பெறலாம்; இஃதுணர்
வீரே'',

என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகின்ருர்.

மகாகவி பாரதியாரின் பக்தியைப்புரிந்து கொண்டால் நாமும் பக்தி என்னும் பயிற்சியில் ஈடுபட்டுப் பலன் காணலாம். ●●

## மௌன இன்பம்

குயிலின் இசையிலும்
குதலைச் சொல்லிலும்
பொருளில்லா விட்டாலும்
ஓசையின்பம் பயந்து
ஆசைவெறி மூட்டுகிறது
கவிதையிலும் இசைப்பாட்டிலும்
பொருள் இருந்தும்
சொல்லின்பம் பயந்தும்
குயிலுக்கும் குழலுக்கும்
குதலைக்கும் இணையாவதில்லை
பொருளினும் சொல்
இன்பமுடையது
சொல்லினும் மௌனம்
மிகுந்த இன்பமுடையது
என்பதைப் புரிந்து கொள்ள
நெடுநாள் ஆகவில்லை

— மு. கு. ஜகந்நாத ராஜா



# மதுக்கரையில் ஒரு விழா

21-7-81-அன்று மதுக்கரையில் கோவை வடக்கு சர்வோதய சங்கத்தின் சார்பில் நிறுவப் பட்டுள்ள குடிர் டாய்லட் சோப்பு உற்பத்தி நிலையத் திறப்புவிழா நடைபெற்றது.

இந்த உற்பத்தி நிலையம் திருமதி சீதாலட்சுமி ராமச் சந்திரன் அவர்களால் கோவை வடக்கு சர்வோதய சங்கத்திற்கு நன்கொடையாக கொடுக்கப்பட்ட ½ ஏக்கர் நிலத்தில் அமைந் துள்ளது குறிப்பிடத்தக்கது. இங்கு ஏற்கெனவே சலவை சோப்பு உற்பத்தி நிலையம் ஒன் றும் இயங்கி வருகிறது. இந்த இலாகாவிற்கு காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமி அவர்களால் அடிக்கல் நாட்டப் பட்டது. தமிழகஆளுநராகஇருந்த மேதகு பட்வாரி அவர்களால் சென்ற 26-8-79-ல் துவக்கி வைக்கப்பட்டு, சோப்பு உற் பத்தி நடைபெற்று வருகிறது.

மதுக்கரை என்றவுடன் அனை வருக்கும் இங்குள்ள சிமெண்ட் ஆலைதான் நினைவிற்கு வருகிறது. மதுக்கரைக்கு ஏற்கெனவே சிறப்புமிக்க இடம் உண்டு. இங்குள்ள பர்வதத்தின் உச்சியில் தர்மலிங்கேசுவரர் ஆலயம் அமைந்துள்ளது தான் அச்சிறப் புக்குக் காரணம். தர்மலிங்கேசு வரர் தரணிதனில் வாழும்மக்களைக் காத்து அருள்பாலித்து வருகிறார். இங்கு சுற்றிலும் பர்வதக் குன்று கள் இருக்கின்றன. அவற்றில் பசுமையான மரங்களும், செடி களும் இருக்கின்றன. அவைகளில் பருவ காலங்களில் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அம் மலர்களில் (மது) தேன்நிரம்பி இருக்கிறது. தேன் நிரம்பிய பர்வதக் குன்றுகள் இருப்பதன் காரணமாகத்தான் இவ்விடத் திற்கு மதுக்கரை என்ற பெயர் வந்தது போலும். இவ்விடத்தில் எப்பொழுதும் மெல்லிய காற்று வீசுகிறது. அக்காற்று பர்வதக் குன்றுகளிலுள்ள மரங்கள், மூலிகைகள் ஆகியவற்றைக் கடந்து வரும் போது மூலிகைகளி லுள்ள மருத்துவ தன்மையையும் தன்னுள் அடக்கி வருகிறது. எனவே காலை, மாலை இரண்டு நேரங்களிலும் இங்குள்ள



அகில இந்திய காதி கமிஷன் தலைவர் திரு. ஏ. எம். தாமஸ் அவர்கள் டாய்லட் சோப்பு ஆரம்ப விழாவிற்கு வருகை தந்த போது அவரை மலர்தூவி வரவேற்றல்.

காற்றை சுவாசித்தால் உடல் உரம் பெறுகிறது. சில நோய்களும் குணமாகிறது எனக் கூறப்படுகிறது. உடலுக்கு உரம்தரும் மெல்லிய காற்று இங்கு எப்பொழுதும் வீசிக் கொண்டிருக்கிறது. குன்றை ஒட்டிய மேட்டுப் பகுதியில் தான் இந்த இலாக்காக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

விழாவிற்கு வருகை தந்த கதர் கமிஷன் தலைவருக்கு மல்லிகை மலர்களால் சிறப்புமிக்க கலையழகுடன் தயாரிக்கப்பட்ட மலர்க்கிரீடம் ஒன்றை சூட்டி தர்மலிங்கேசுவரர் ஆலயத்தின் அறங்காவலர் திரு. நரசிம்ம ராஜு வரவேற்றார். கோவை வடக்கு சர்வோதய சங்கச் செயலாளர் திரு. வி. பி. தண்டாயுதம் தலைவருக்கு மலர்மாலை சூட்டினார். தலைவர் குளிக்கும்சோப்பு அலகை துவக்கி வைத்தார்.

விழாவிற்கு முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. சுன்னா சாகிப் அவர்கள் தலைமை தாங்கினார். விழாவிற்கு வந்திருந்தோரை கோவை வடக்கு சர்வோதய சங்கச் செயலாளர் திரு. வி. பி. தண்டாயுதம் வரவேற்றார்.

தலைவர் தனது உரையில், நான் அரசியல்வாதி, பல கூட்



குடிர் டாய்லட் சோப் உற்பத்தி நிலையத்தை ஆரம்பித்து வைத்து அடிக்கல் நாட்டுகிருர் அகில இந்திய காதி கமிஷன் தலைவர் திரு. A. M. தாமஸ் அவர்கள். அவருடன் திரு. சுன்னுசாகிப் நிர்வாக அறங்காவலர் திரு. S. சிவன்பிள்ளை டாக்டர் சத்ரசால்சிங் I. A. S. திரு. இலட்சுமிகாந்தன் ஆகியோர் உள்ளனர்.

டங்களில் பேசியுள்ளேன். ஆனுல் அவற்றிலெல்லாம் எனக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை. இன்றைய கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுவதற்கு வாய்ப்பு கிடைத்தது எனக்கு பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது. உள்ளத்தில் எழுகின்ற உருக்கமான கருத்துக்களை நெருக்கமானவர்களிடம் சொல்லத் துடிக்கிறது. ஆனுல் நேரமில்லை. நம்நாடு நடைபயிலு முன்னரே கொடை பயின்ற நாடு. ஈதல் என்பது இங்குள்ள மக்களிடையே இயல்பாகவுள்ள தன்மை. காந்தியக் கருத்துக்களில் தர்மம் தழைக்கும் ஆற்றல் நிரம்பியுள்ளது. காந்தியம் குடிசைத் தொழில்களை கதர் கிராமக் கைத் தொழில்களை வளர்க்க வேண்டும் என்று கூறுகிறது. இது பெரிய தொழில்களோடு போட்டி போட முடியுமா? அவை வளர்ச்சியடைய முடியுமா? என ஐயப்படுகின்றனர். வளர்ச்சியடையவும், காந்தியம் வெற்றி பெறும், கட்டுண்டோம், பொறுத்திருப்போம். காலம் வரும், காந்தியம் வெற்றி பெற்றே தீரும். கதர் கிராமக் கைத் தொழில் வளர்ச்சி பெற்றே தீரும். குன்றுவாழ் மருதமலை முருகன் அருள் கிடைக்கும். பாரத தேசத்தின் முதுகு எலும்பாக விளங்குவது கதர் கிராமக் கைத் தொழில்களே. இவை வளர்ச்சியடையுமா? என்ற ஏக்கம் நமக்கு இருக்கலாகாது. ஏக்கம் ஊக்கமாக மாற வேண்டும். காந்தியம் மலர வேண்டுமாயின் முகநக நட்பது நட்பன்று. காந்தியத்தின் உறைவிடம் சத்தியம், அகிம்சை இவற்றை ஆக்கப் பணிகளின் மூலம்தான் அடைய முடியும். நாம் ஆக்கப்பணி செய்வோம். அதைக் கரத்தாலே, உரத்தாலே

திறத்தாலே செய்வோம் வெற்றி நிச்சயம் எனக் கூறி கம்பராமாயணம் சமஸ்கிருத ஸ்லோகங்கள் ஆகியவற்றில் இருந்து அறக் கருத்துக் கூறி கூடியிருந்தோரை ஆன்மீக நிலைக்கு அழைத்துச் சென்று தனது உரையை முடித்தார்.

அடுத்து உண்ணு எண்ணெய் சோப்புப் பணிகள் என்பது குறித்து கதர் கமிஷன் சோப்பு இலாகா இயக்குநர் திரு. லட்சுமி காந்தன் அவர்கள் உரையாற்றினார். அவர் தமது உரையில் தமிழ்நாடு சர்வோதய சங்கம் சோப்பு தயாரிக்கும் பணிகளை நன்ருகச் செய்து வருகிறது. சோப்பு உற்பத்தியில் மாறுதல் கள் தோன்றியுள்ளன. இதைச் சிறப்பாக செய்ய வேண்டிய பொறுப்பு அதிகம் உள்ளது. தமிழ்நாட்டில் சலவை சோப்பு குளிக்கும் சோப்பு உற்பத்தியாகிறது. குளிக்கும் சோப்பு தயாரிப்பதில் புதிய நீராவியைப் பயன்படுத்தி தயாரிக்கும் முறையை மேற்கொண்டோம். இதற்கு ரத்திபாய் கோந்தியா உதவினர். புதிய முறையில் குளிக்கும் சோப்பு தயாரிக்கும் நிலையங்கள் பாரதத்தில் பத்து இருக்கின்றன. அவற்றில் இரண்டு தமிழ்நாட்டில் இயங்குகின்றன. அகில இந்தியாவில் உண்ணு எண்ணெயில் 21 கோடி ரூபாய் பெறுமான சலவை சோப்பு உற்பத்தியாகிறது. அதில் 5 கோடி ரூபாய் பெறுமான சலவை சோப்பு தமிழ்நாட்டில் உற்பத்தியாகிறது. பாரதத்தில் குவியல் முறையில் பெரிய தொழிற்சாலைகளின் மூலம் 9.58 லட்சம் டாலர் சோப்பு உற்பத்தியாகிறது. குளிக்கும் சோப்பு (டாய்லட்) 1.63 லட்சம் டன் உற்பத்தியாகிறது. குளிக்கும் சோப் உற்பத்தியை ஆண்டுதோறும் 5% பெருக்க வேண்டும் என கமிஷன் முடிவு செய்துள்ளது. இவ்வாறு 5% உற்பத்தியைப் பெருக்க மொத்தம் 900 நிலையங்களை 5 ஆண்டுகளில் ஆரம்பிக்க வேண்டும். இதுவரை 84 நிலையங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. 84-85 ஆம் ஆண்டிற்குள் 900 நிலையங்கள் துவக்க வேண்டும் என கமிஷன்முடிவு செய்துள்ளது. டாடா, பிர்லா போன்றவர்களின் நிறுவனங்களில் உற்பத்தியாகும் சோப்புகளுக்கு (டாய்லட்) மிகப் பெரிய விளம்பரங்கள் செய்யப்படுகின்றது. விளம்பரத்தின் மூலம் வியாபாரத் துறையில் ஆதிக்கம் செலுத்த விரும்புகின்றனர். இந்த விளம்பரம் ஆதிக்கப் போட்டி இவைகளையெல்லாம் எதிர்த்து நமது தயாரிப்பு சோப்புகளை மக்கள் மனதில், விற்பனையில் இடம் பெற வேண்டுமானுல் நமது தரம் உயர்ந்ததாக இருக்க வேண்டும். அதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டும். தமிழ்நாடு சலவை சோப்பு உற்பத்தி செய்வதில் முன்னணியில் நிற்பதைப் போன்று குளிக்கும் சோப்பு (டாய்லட்) உற்பத்தியிலும் முன்னணியில் இருக்கும் என எண்ணுகிறேன். இங்கு உற்சாக மிக்க இளைஞர்கள் பணி செய்கிருர்கள். தர்மபலம், தெய்வ பலம், மனிதபலம் மூன்றும் இருப்பதால் எண்ணிய இலக்கை அடைய முடியும் என்று எள்ளளவும் ஐயமில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன் என்ருர்கள்.

அடுத்து சோப்பு உற்பத்தியைத் துவக்கிவைத்த கதர்கமிஷன் தலைவர் மேதகு ஏ.எம். தாமஸ் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்டதாவது, இன்று இனிமை தரும் காலை நேரத்தில் உங்களனை வரையும் இந்த இனிமையான இடத்தில் சந்திப்பதில் மகிழ்வு எய்துகிறேன். இங்கு சோப் உற்பத்தி நிலையத்தைத்துவக்கிவைக்க வந்துள்ளேன். மது என்றால்தேன், கரை என்றால் அதைப் பாதுகாக்கும் எல்லை. மதுவைப் பாதுகாக்கும் கரை மதுக்கரை என்பதாகும். இங்கு புதிதாக சலவை சோப்பு உற்பத்தி நிலையம் ஏற்கெனவே இயங்கி வருகிறது. இன்று டாய்லட் சோப்பு நிலையத்தைத் துவக்கி வைத்துள்ளேன். இந்த இடம் மிக அழகான ரம்மியமான இடம். இங்கு சோப்பு உற்பத்தியைத் தவிர ஐந்தாறு கதர் கிராமக் கைத் தொழில் பணிகள் நடைபெற வேண்டும். கதர் உற்பத்தியும் செய்யப்பட வேண்டும். இத்தகைய அபிவிருத்தியை கதர் கமிஷன் விரும்புகிறது. குளிக்கும் சோப்பு உற்பத்தி செய்வது புதிய முயற்சி. டாய்லட் சோப் உற்பத்திக்கு தமிழ்நாடு, கேரளம் ஆகியவைகள் முன்னோடிகளாக இருந்திருக்கின்றன. கிராமங்களில் பணிகளைத் துவக்குவது சிறிய உற்பத்திகளில் பணிகளைத் துவக்கி கிராமங்களில் வாழும் மக்களுக்கு வேலையளிப்பது பாரத அரசின் கொள்கையாக இருக்கிறது. ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ்நாட்டின் சோப்பு உற்பத்தி பத்து பனிரெண்டு கோடியாக உயர வேண்டும். இப்பொழுது குளிக்கும் சோப்பு மூன்று உற்பத்தி நிலையங்களுக்கு ஒரு பேஸ் யூனிட் ஆரம்பிக்கப்படுகிறது. தமிழ்நாட்டில் கதர் நிறுவனங்கள் சுதந்திரமாக இயங்குகின்றன. எனவே இந்த உற்பத்தி திருப்பூர் பேஸ் யூனிட்டை எதிர்பாராது இங்கேயே ஒரு பேஸ் யூனிட் ஆரம்பிக்க வேண்டும் என்று இங்கு எனக்கு முடிசூட்டி விட்டீர்கள். நான் அந்த நிலையம் ஆரம்பிக்கலாம் எனக் கூறி விட்டேன். ஆனால் கிராமக் கைத் தொழில்களுக்கு கமிஷனின் உறுப்பினர் செயலாளர் பொறுப்பாக இருக்கிறார். அவர் அனுமதிக்க வேண்டும். அவ்வம்மையாரிடம் இங்கு பேஸ் யூனிட் ஆரம்பிக்க வேண்டிய அவசியத்தைக் குறித்து சோப்பு இலாகா இயக்குநர் திரு. லட்சுமிகாந்தன் அவர்கள் எடுத்துக் கூற வேண்டும். இங்கு தயாராகும் சோப்பு தரத்தில் உயர்ந்ததாக இருக்க வேண்டும். விளம்பரத்தைப் பற்றிக் கூறினார்கள். லக்ஸ் சோப் நடிகைகளின் சோப். மங்கையர்களின் மனம் கவரும் சோப், குளித்த பின்னர் புத்துணர்ச்சி ஊட்டும் சோப் என்றும், லைப்பாய் சோப் ஆரோக்கியத்திற்கான சோப், இதை உபயோகித்தால் ஆரோக்கியம் நன்றாக இருக்கும் என்று விளம்பரப்படுத்துகிறார்கள். நமது உற்பத்தியைப் பற்றியும் நமது சோப்பின் குணத்தைப் பற்றியும் நாமும் பிரச்சாரம் செய்ய வேண்டும். இது உண்ணு எண்ணெயில் உற்பத்தியானது கிராமவாசிகளுக்கு வேலை வாய்ப்பளிப்பது. கிராம வாசிகளின் நலனுக்காகத் தயாரிக்கப்பட்டது. இதை உபயோகித்தால் ஆரோக்கியம் வளரும். இதனால் கிராமப் பொருளாதாரம் வளருகிறது. லட்சக் கணக்கான ஆதிவாசிகள், கிராமவாசிகள் ஆகியோர்களுக்கு வேப்ப

முத்து, புங்கை இலுப்பை ஆகிய முத்துக்களைச் சேகரிப்பதில் வேலை வாய்ப்பு கிடைக்கிறது. என்ற உண்மைகளையெல்லாம் மக்கள் உணருமாறு விளம்பரம் செய்ய வேண்டும். உற்பத்தி, விற்பனை, தரம் இவை பற்றி குறிப்பிட்டுள்ளேன். எப்பாடுபட்டேனும் எந்த விலை கொடுத்தேனும் தரம் குறையாதிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். குளிக்கும் சோப்பில் வனஸ்ரி என்ற சோப்பு உற்பத்தி துவங்க இருக்கிறோம். இதை உபயோகித்து குளித்த பின்னர் குளிப்போருக்கு ஒரு புத்துணர்ச்சியை ஏற்படுத்த வல்லது என்ற விளம்பர வாக்கியத்தையும், உபயோகிப்பதாகக் கூறி விளம்பரத் தேவையை விளக்கினர். தமிழ் நாட்டிற்கு கதர் கிராமக் கைத் தொழில்களைப் பற்றிக் கூற வேண்டியதில்லை. ஏனெனில் இன்று கதர் கிராமக் கைத்தொழில்களில் பாரதத்தில் முன்னணியில் இருப்பது தமிழ் நாடும், குஜராத்தும் தான். ஏனைய மாநிலத்தவரிடம், தமிழ் நாட்டைப் பாருங்கள் எனத்தான் கூறுகிறோம். இரண்டு நாட்களுக்கு முன்னர் திட்ட அமைச்சர் திவாரி அவர்கள் கிராம மக்களுக்கு முழுவேலை கொடுப்பதைப் பற்றி விவாதிக்க திட்டக்கமிஷனின் கூட்டத்தைக் கூட்டியிருந்தார். அங்கு தமிழ்நாட்டைப் பற்றி திவாரி அவர்களும், பிரதமரும் குறிப்பிட்டார்கள். சலவை சோப்பு, குளிக்கும் சோப்பு, பட்டு, கதர் ஏனைய தொழில்களில் தமிழகம் முன்னணியில் உள்ளது. இவை வளர்ச்சி பெற வேண்டும். இந்த இடத்தை நன்கொடையாகக் கொடுத்த திருமதி சீதாலட்சுமியைப் போன்ற பல சீதாலட்சுமிகள் தோன்ற வேண்டும் எனக் கூறி முடித்தார். உண்ணு எண்ணெய்க்கு ஆதாரமாக உள்ள வேப்பமரங்கள் அதிகம் வளர்க்கப்பட வேண்டும் என்பதற்காக இரண்டு வேப்பங் கன்றுகளையும் திரு. தாமஸ் அவர்கள் நட்டார்கள். விழாவிற்கு வருகை தந்த அனைவருக்கும் புதிதாகத் தயாரிக்கப்பட்ட 'குடிர்' டாய்லட் வாசனை சோப்பு ஒன்றும் வழங்கப்பட்டது. சங்கத் தலைவர் திரு.மீனாட்சி சுந்தரம் நன்றி கூற விழா இனிதே நிறைவுற்றது.

# அய்யாமுத்து காந்தி பண்ணைக்கு கதர் கமிஷன் தலைவர் வருகை

**"கதர் என்றால் அய்யாமுத்து,**
**அய்யாமுத்து என்றால் கதர்" ... — ராஜாஜி**

மூதறிஞர் ராஜாஜி குறிப்பிட்டதற்கேற்ப அமரர் அய்யாமுத்து கதர் உற்பத்திக்கினை நிர்வாகியாகத்தனது வாழ்க்கையைத் துவக்கி அகில பாரத சர்க்கா சங்கத்தின் தமிழ்நாட்டுக் கிளையில் செயலாளர் நிலைக்கு உயர்ந்தார். கதர்ப் பணியையும் கதர் பிரச்சாரத்தையும் சிறப்பாகச் செய்து தமிழ்நாட்டுக் கதர் என்றால் அகில இந்தியாவிலும் அதற்கு தனிச் சிறப்பான இடத்தைத்தேடித் தந்தவர் அமரர் அய்யாமுத்து. கதர்ப் பணிக்காகவே தனது ஆற்றல்கள்

அனைத்தையும் ஈடுபடுத்தி அப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் பொள்ளாச்சிக்கு அருகில் உள்ள கிணத்துக்கடவு என்ற ஊரில் உள்ள இருபது ஏக்கர் நிலத்திற்கு காந்தி பண்ணை என்ற பெயரிட்டு அங்கு வேளாண்மைப் பணிகள் செய்து கொண்டு தனது எஞ்சிய நாட்களைக் கழித்தார். தமிழக அரசு கதர் கிராமக் கைத்தொழில்களை ஏற்றபோது, அதன் கௌரவ ஆலோசகராகப் பணியாற்றினர். இவர் கதர்ப் பணிக்கு செய்த சேவை பாராட்டுதற்குரியது.

இப்பண்ணையை ஓராண்டிற்கு முன்னர் பொள்ளாச்சி சர்வோதய சங்கம் விலைக்கு வாங்கியுள்ளது. இங்கு கோவை அய்யாமுத்து சேவா நிலயம் என்ற பெயரில் தச்சு, கொல்லுப்பட்டரை, கைக் குத்தலரிசி, மின்விசைச் செக்கு, 12 கதிர் இராட்டை நூற்பு பட்டு நெசவுஆகிய பணிகளைத் துவக்கத் திட்டமிட்டு, சோப்பு செய்தல் தச்சு கொல்லுப்பட்டரை ஆகிய பணிகளைத் துவக்கி உள்ளது. இவற்றைத் துவக்கி வைக்கவே கதர் கிராமக் கைத்தொழில் கமிஷன் தலைவர் சென்ற 21-7-81-ந் தேதி இங்கு வருகை தந்தார்.

முதலில் பொள்ளாச்சிக்கு அருகில் உள்ள ரெங்கசமுத்திரத்தில் சங்கத்தின் சார்பில் நடைபெற்று வரும் ஆறுகதிர், 12 கதர் உலோக இராட்டை நூற்பு பஞ்சு உடைக்கும் பகுதி, சோப்பு உற்பத்தி, ஆயத்த ஆடை, காலணி தயாரிப்பு. எண்ணெய் உற்பத்தி ஆகிய பகுதிகளில் நடைபெறும் பணிகளைப்பார்த்துப்பாராட்டினர். பலபகுதிகளையும் சுற்றிப்பார்த்துக் கொண்டு வரும்போது ஊழியர்களின் குடியிருப்புகளுக்கே வந்தார். அங்கு கதர் ஊழியர்களின் வாழ்க்கைத் துணைவியர்கள் கும்பலாக நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார். கதர் ஊழியர்கள் தான் பணி செய்து கொண்டிருக்கிருர்கள். பிறரை நூற்கச் செய்கிருர்கள். அவர்களது துணைவியார்கள் சமைத்து விட்டு எஞ்சிய நேரத்தைப் பயன்படுத்தாது இருக்கிருர்கள் என்று எண்ணினுர் போலும். ''நீங்கள் எல்லாம் சமைத்த பின்னர் எஞ்சிய நேரத்தில் என்ன செய்கிறீர்கள்?'' எனக் கேட்டார். ''நாங்கள் நூற்கிரோம்'' என்றனர். இப் பதிலைக் கேட்டு ''உண்மையாக நூற்கிருர்களா?'' என்ற ஐயம் ஏற்பட்டதோ என்னவோ தெரியவில்லை. உடனே ஊழியரின் குடியிருப்பு ஒன்றில் சென்று இராட்டை இருக்கிறதா எனப் பார்த்தார். அங்கு இராட்டை இருப்பதையும், நூற்றிருப்பதையும் கண்டார். ஒன்றில்தான் இருக்கிறதா மற்றைய குடியிருப்புகளிலும் நூற்பு நடைபெறுகிறதா என்பதைத் தெரிந்துகொள்ள வேறு ஒரு குடியிருப்பிற்கும் சென்று பார்த்தார். அங்கும் இராட்டை இருந்தது. இதைக் கண்ட தலைவர் மகிழ்ச்சி தெரிவித்தார். நூற்பு மட்டும் போதாது பால் மாடுகளும் வளர்க்க வேண்டும் என்று பெண்களிடம் கூறினுர்.

பால் மாடுகளுக்கு ஏற்பாடு செய்து தருமாறு செயலாளரிடம் கூறினர். பின்னர் பொள்ளாச்சி பவனைப் பார்த்து விட்டு காந்திய பண்ணைக்கு வருகை தந்தார். அங்கு தச்சு, கொல்லுப் பட்டரையைத் துவக்கி வைத்த

பின்னர் அங்கு ஏற்பாடு செய்திருந்த பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டார். கூட்டத்திற்கு அக்கம்பக்கத்து கிராமவாசிகள், நூற்போர்கள், ஊழியர்கள் ஆகியோர்கள் பெருந்திரளாக வருகை தந்திருந்தனர். கூட்டத்திற்கு தமிழ்நாடு சர்வோதய சங்க திரு. சி. துரைராசன் தலைமை வகித்தார். சங்கச் செயலாளர் திரு. மு.கந்தசாமி எல்லோரையும் வரவேற்ருர். தலைவர் திரு. எம். அப்பாக்குட்டி சங்க வேலைகள் பற்றி அறிக்கையை வாசித்தார்.

கதர் கமிஷன் தலைவர் திரு. எ. எம். தாமஸ் தமிழில் சகோதர சகோதரிகளே வணக்கம் என்று கூறியபின்னர், ஆங்கிலத்தில் தனது சொற்பொழிவைத் துவக்கினுர். அவர் தமது உரையில் ‘‘ நான் இங்கு இரண்டு தகுதிகளுடன் வந்துள்ளேன்’’. கமிஷன் தலைவர் என்பது ஒரு தகுதி. மற்ருென்று யாத்திரிகன் என்ற தகுதி. சாதாரணமாக கமிஷன் தலைவர் யாத்திரைக்காக செல்ல மாட்டார்கள். அமரர் அய்யாமுத்து இப்பொழுது நம்முடன் இல்லை. ஆனுல் அவரது ஆத்மா இங்கு உள்ளது. அவரைச் சந்திக்கவே நான் இங்கு வந்துள்ளேன். இப்புனித மாலை வேளையில் உங்களனைவரையும் சந்திக்க பெரு மகிழ்வு எய்துகிறேன். ‘‘கதர் என்ருல் அய்யாமுத்து, அய்யாமுத்து என்ருல் கதர்’’ என்று ராஜாஜி கூறியுள்ளார். ராஜாஜி எளிதாக யாரையும் பாராட்டி விட மாட்டார். அவர் பாராட்டியுள்ளார் என்பதால் உண்மையாகவே அய்யமுத்து பெருமைக்குரியவரே யாவார். ராஜாஜியின்பெயரையே தனது இல்லத்திற்கு சூட்டியுள்ளார் அய்யாமுத்து. காந்தியடிகள், ராஜாஜி ஆகியோர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட ஒருவரைப் பாராட்ட நாம் இங்கு கூடியுள்ளோம். காந்தியடிகளுடன் அய்யாமுத்து நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள். கதர் என்பது சுதந்திரத்தின் சின்னம் என நேரு பெருமான் கூறியுள்ளார். இந்திய சுதந்திரத்திற்கும் கதருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அனைவருக்கும் கதர் மனப்பான்மை வேண்டும். காந்தியடிகள் கதரை சூரியன் என்றும் ஏனைய கிராமக் கைத்தொழில்களை அதனைச் சுற்றிவரும் கிரகங்கள் எனவும் குறிப்பிட்டார். காந்தியடிகளுக்கு ஒவ்வொரு பணிக்கும் தகுந்த மனிதர்களைத் தேர்ந்தெடுக்கும் ஆற்றல் உண்டு. எனவேதான் கதர்ப்பணிக்கு காந்தியடிகள் அய்யாமுத்துவைத் தேர்ந்தெடுத்தார். இன்று தமிழ்நாடு, கதர் கிராமக் கைத்தொழில் பணிகளில் தலைமை வகிப்பதற்குக் காரணம் அய்யாமுத்து போன்றவர்கள்தான். கதர் வளர்ச்சியை அய்யாமுத்துவிடமிருந்துதான் கணக்கிட வேண்டும்.

இன்று நூற்கும் நூற்றுக் கணக்கான சகோதர சகோதரிகளைப் பார்க்கிறேன். அய்யாமுத்து இராட்டைகளின்வேகத்தை அதிகப்படுத்த வேண்டும் என்று எண்ணினுர். கதர்த் துறையில் தொழில் நுணுக்கம் வளர வேண்டும் என எண்ணினுர். எனவே தான் அன்றே காந்தியடிகள் இராட்டையைக் கண்டுபிடிப்பவர்களுக்கு இலட்சம் ரூபாய் பரிசு

கொடுக்கப்படும் என அறிவித்திருந்தார். கதர் கிராமக் கைத்தொழில் பணிகளில் அநேக மாநிலங்கள் முன்னேற முடியவில்லை. உத்திரப்பிரதேசம் பெரிய மாநிலம். மொத்த கதர் உற்பத்தியில் ஐந்தில் ஒரு பங்கு அதாவது இருபது கோடி ரூபாய் பெறுமானமுள்ள கதர் உற்பத்தியாகிறது. அங்கு அதிக எண்ணிக்கையில் நூற்போர்கள் இருக்கின்றனர்; பழைய இராட்டைகளையே நூற்பிற்குப் பயன்படுத்துகிருர்கள். தொழில் நுணுக்கங்கள் அங்கு புகுத்தப்படவில்லை, இங்கு உள்ள நூற்போர் நல்ல கூலி பெறுகின்றனர். பாரத பிரதமர் உ.பி., பீகார், போன்ற மாநிலங்களுக்குச் செல்லும்போது அபிவிருத்தி அடைந்த இராட்டைகள், கதர் கிராமக் கைத்தொழில்கள் பற்றிய குறிப்புகளைஅனுப்புகிறேன்.இங்கு நான் சுற்றிப் பார்க்கும் இடங்களில் நல்ல பெண் மக்கள் நூற்பதைப் பார்க்கிறேன். 12 கதிர் இராட்டையைப் பார்க்கிறேன். இதை வட நாட்டில் பார்க்க இயலாது. அங்கு நடைபெறும் கண்காட்சிகளில்தான் இந்த இராட்டையைப் பார்க்கலாம். அங்கும் இந்த இராட்டைகளை இயக்குவதற்கு இங்கிருந்து தான் நூற்போரை அழைத்துச் செல்ல வேண்டி உள்ளது. தொழில் நுணுக்கத்தில் தமிழ்நாடு முன்னேறி இருக்கிறது. அய்யாமுத்து போன்றவர்களின் தலைமையே இதற்கு முக்கிய காரணமாகும். காந்தியடிகள் கணக்குகள் முறையாக வைக்கப்பட வேண்டும் என்பதில் கண்டிப்பாக இருந்தார். 1920-ஆம் ஆண்டே பொதுப் பணத்திற்கு கவனமாகக் கணக்கு வைக்கப்பட வேண்டும் என்று காந்தியடிகள் எழுதி இருந்தார் என்று மகாராட்டிர முதல்வர் ஒரு இடத்தில் தெரிவித்தார். கதர் கிராமக் கைத்தொழில் கமிஷன் கதர், கிராமக் கைத்தொழில், தச்சு, கொல்லுப் பட்டறை போன்ற 24 தொழில்களை அபிவிருத்தி செய்யத் திட்டமிட்டு பணி செய்கிறது. நான் மாணவனுக இருக்கும்போது கற்ற ஆங்கிலக் கவி ஒன்று நினைவுக்கு வருகிறது. ஒருமரத்தடியில் கொல்லன் தனது கருவிகளுடன் இருக்கிருன். அவன் சக்தி வாய்ந்தவன் என்பது அதன் பொருள். கிராமத்தின் கொல்லனைப் பற்றி தெரியும். கிராமத்தவர்கள் தச்சு, கொல்லுப் பணிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்திருந்தனர். கிராமங்கள் தொழிற் கூடமாக இருந்தது. தச்சரும், கொல்லரும் இணைந்து செயல்பட்டனர். இக்காலத்தில் கிராமங்களில் கொல்லர்கள் கிடைப்பது அரிதாக இருக்கிறது. கதர்ப் பணிக்கு கருவிகள் தேவை. இது குறித்து தொழிற்சாலை உரிமையாளர்களுடன் பேச வேண்டி இருந்தது. இதற்கென ஒரு கூட்டம் கூட்டி உள்ளேன். இங்கு மின்விசை செக்கு, மின்விசைத் திரிகை, தச்சு கொல்லுப் பணிகளைத் துவக்கி அமரர்அய்யாமுத்துவின் தொலை நோக்கைப் பூர்த்தி செய்வதாக இந்த மையம் அமையவேண்டும் என்பது எனது விருப்பம். தொழிலதிபர் திரு. மகாலிங்கம் அவர்கள் இன்றைய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதாக இருந்தது. அவரால் இந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள இயலவில்லை. அவர் எனது நண்பர், இப்பணிகளில் ஈடுபட்டு உள்

---

61-ஆம் பக்கம் பார்க்க

# விஞ்ஞானமும் - கிராமங்களும்

— விநோபா

ஒன்றைச் சாதித்தவர் அனைத்தையும் சாதித்தவராவார். விஞ்ஞானத்தையும், தொழில் நுணுக்கத்தையும் கிராமத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும். நமது வேளாண்மைப் பொருளாதாரம் எருதுகளையும், பசுக்களையும் ஆதாரமாகக் கொண்டது. எனவே பசுவதை தடை செய்யப்பட வேண்டும். ஆசிரியர்கள் அரசியலில் கலவாது அச்சமற்று பணி செய்ய வேண்டும் என விளக்குகிறார் விநோபா. — ஆசிரியர்



விஞ்ஞானத்தையும், தொழில் நுணுக்கத்தையும் எம் முறையில் நம் கிராமங்களை எட்டச் செய்வது என்பதே நம் அனைவரின் முன்னுள்ள பிரச்சினையாகும். நாம் பல வழிகளில் கிராமத் தொழில் நுட்பத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும். ஆனால் ஆரம்பத்தில் சில குறிப்பிட்ட துறைகளில் முயற்சி செய்வதே அவற்றில் வெற்றியடைவதற்கான மார்க்கமாகும். ஒன்றை முயற்சி செய்து சாதித்தவர் அனைத்தையும் சாதித்தவராவார் என்பது பழைய பழமொழியாகும்.

எனவே கிராமத் துப்புரவு பிரச்சினைக்கு முதலிடம் அளிக்க வேண்டும். கிராமத்தில் எத்தகைய அசுத்தமோ, குப்பை கூளமோ இருக்காதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். சிறிய அசுத்தங்கள் பற்றியது ஒரு புறமிருக்கட்டும். இன்று மனிதர்கள் ஆங்காங்கே மலங் கழிக்கிறார்கள். அது அங்கேயே அப்படியே கிடக்கிறது. இப்பிரச்சினைக்குத் தீர்வு காணுவதற்கான வழி கண்டுபிடிக்கப்பட்டு ஒவ்வொரு கிராமமும் சுத்தமாகஇருக்குமானால் நீங்கள் அங்கு சென்று மகிழ்ச்சியோடு தங்கி இருக்க இயலும். வெற்றிக்குரிய ஒரு வழியும் பிறந்து விடும். இதை நீங்கள் செய்ய முடியுமானால் நான் உங்களுக்கு எனது சார்பில் ,'நோபல் பரிசு பட்டத்தை'' கொடுத்து விடுவேன். கிராமங்களிலுள்ள அசுத்தத்தை அகற்றுவதன் மூலம் நாம் வேளாண்மைத் துறைக்கு உரமூட்டியவர்களாவோம். இத்துறையில் ''பயோகேஸ்'' (சாண எரிவாயு) இயந்திரத்தைப் பயன்படுத்துவது நமக்கு ஓர் வரப்பிரசாதமாகும். இதைப்பற்றி பிரச்சாரம் செய்ய வேண்டும். இதைப் போன்ற தொழில் நுணுக்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, அதைப் பயன்படுத்த வேண்டும்.

துப்புரவிற்குப் பின்னர் வேலையில்லாதிருக்கும் மக்களை உற்பத்திப் பணியில் பயன்படுத்த வேண்டிய பிரச்சினை எழுகிறது. எடுத்துக் காட்டாக ஆறுகதிர் உலோக இராட்டையை எடுத்துக் கொள்ளலாம். இது தொழில்

தமிழில்

சி. குணராசன்.

நுணுக்கம் நிறைந்த கருவி. இதன் மூலம் மக்களுக்கு நிவாரணம் அளிக்கலாம். இதைப் போன்று கிராம மக்களுக்கு பணி கொடுக்கக் கூடிய தொழில் நுணுக்கங்கள் முடிந்தவரை அதிகமாகக் கண்டு பிடிக்கப்பட வேண்டும். இதைப் போன்று ஒரே சமயத்தில் ஒரே பிரச்சினையை மேற்கொண்டு நாம் கிராமங்களில் மாறுதல்களைக் கொண்டு வர வேண்டும். எனவே நீங்கள் இதற்கு தங்களுடைய வேலைத் திட்டத்தில் முதலிடம் தாருங்கள்.

நம்முடைய வேளாண்மைப் பணியின் பொருளாதாரம் முழுவதும் எருதுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது இரண்டாவது விஷயம். பழங் காலத்திலிருந்தே எருதுகளின் மகத்துவம் மகான்களின் பெயரால் வெளியாகிக் கொண்டிருக்கிறது. கௌதம் என்றால் (எருதுகளில் சிறப்பானது) விருஷப தேவ் (எருதுகளில் தேவதை) என்பன போன்ற வார்த்தைகளில் வெளியாகிறது. பௌத்த, ஜைன, இந்து மதங்கள் போன்ற அனைத்தும் எருதுகளுக்கு அதிகமான சிறப்புக் கொடுத்துள்ளது. இந்தி வார்த்தைகளான 'காய்', 'கவூ' என்ற வார்த்தைகளுக்கும் ஆங்கில 'கௌ' என்ற வார்த்தைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதை அறிவீர்கள். இதைப் போன்றே 'பைல்' என்ற இந்தி வார்த்தை 'புல்' என்ற ஆங்கிலப் பதத்தில் இருக்கிறது. இதன் மூலம் இவற்றிற்கு சர்வதேசத்திலுள்ள தொடர்புகள் நன்றாகத் தெரிய வருகிறது. பசு, எருது ஆகியவற்றின் வதையை தடை செய்யும் ஒரு பண்பாட்டை கலாசாரத்தை பாரதம் வளர்ச்சியடையச் செய்துள்ளது. நமது விஞ்ஞானிகள் இதன் அடிப்படையை நன்றாகத் தெரிந்துகொண்டு நமது பண்பாட்டின் இக் கொள்கை கடைப்பிடிக்கப்படுகிறதா என்பதை கவனிக்க வேண்டும். நமது பொருளாதார ஏற்பாட்டின் அமைப்பில் பசுக்கள் தாய்க்குச் சமமாகவும், எருதுகள் தந்தைக் கொப்பாகவும் இருக்கின்றன. எனக்குத் தாய்ப் பால் சில மாதங்கள்தான் கிடைத்தது. ஆனால் எஞ்சிய எண்பத்தி நான்கு ஆண்டுகள் பசுவின் பால் தான் என்னை வளர்த்தது. எனவே பூரணமான பசுவதைத்தடை, விஞ்ஞான, ஆத்மீக, அரசியல் நோக்குடன் பார்த்தாலும் மிக அவசியமான தொன்றாகும்.

பள்ளிக் குழந்தைகளுக்கு பாடம் கற்பிப்பவர்கள் அரசியலிலிருந்து ஒதுங்கி தனியாக இருக்க வேண்டும். அவர்கள் ஆசார்யர்களைப் போன்று அச்சமற்று, எந்த ஒரு கட்சியையும் சாராது துவேஷமின்றி இருக்க வேண்டும்.

இக் கொள்கைகளை தீவிரமாக நடைமுறைக்குக் கொண்டு வர ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு மாவட்டம் தேர்ந்தெடுக்கப்பட்டு அங்கு பணி நடைபெற வேண்டும். அதன் சிறப்பு நாடு முழுவதின் சிந்தனையைத் தூண்டும். நாம் சரியான திக்கில் பணியைத் துவக்க வேண்டும். இதன் பயன் நிச்சயமாகக் கிடைக்கும்.

தேசிய விஞ்ஞான கழகத்தின் தலைவர், உறுப்பினர்கள், காசி இந்துபல்கலைக்கழகதுணைவேந்தர் ஆகியோர் அக்டோபர் 30, 1979-ஆம் ஆண்டு வார்தாவிலுள்ள கிராம விஞ்ஞான மையத்தைப் பார்க்க வந்திருந்தனர். அப்பொழுது பவனார் பிரம்ம வித்தியா மந்திரில் வினோபாஜியையும் சந்தித்த போது வினோபாபாவே அவர்கள் வெளியிட்ட கருத்துக்களே இக்கட்டுரையாக வடிக்கப்பட்டுள்ளது. ●●

ஆதாரம் : 'மைத்ரி'

# உடலில் ஒரு சிரஞ்சீவி

**எஸ். எல். எஸ்**

எலும்பைப்பற்றி நாம் கவலைப்படுவதில்லை-அது சரியாக இருக்கும் வரை! எலும்பு வளர்ச்சிக்காக நாம் 'ஸ்பெஷலா'க ஏதாவது சாப்பிடுகிருேமா? எலும்பை நல்ல நிலையில் வைத்துக் கொள்ள ஏதாவது பயிற்சி செய்கிருேமா? ஆனல் எலும்பில் ஏதாவது சிக்கல் ஏற்படட்டும்; நம்மால் எதுவும் செய்ய முடியாது. நடக்கவும் நகரவும் கூட முடியாது!

எலும்பு என்றதும் கெட்டியான, இரத்த ஓட்டம் இல்லாத, ஏதோ ஒரு குச்சி போன்ற உருவம்தான் நம் நினைவுக்கு வருகிறது. ஆனல் இது எவ்வளவு பெரிய தவறு? கட்டடத்துக்கு அடிப்படை போடுவதைப் போல உடம்புக்கு இது அடிப்படை சக்தியாக இருக்கிறது. உடலின் கால்ஷியம், பாஸ்வரம், உலோக சத்துக்கள் எல்லாம் இங்கேதான் இருக்கின்றன. கண் விழித்திருந்தாலும், தூங்கினுலும் அந்தந்த எலும்புகள் அவற்றின் வேலையைச் சரியாகச் செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் நாம் சதை மூட்டையாகத்தான் இருப்போம்.

இது ஒரு பெரிய தொழிற்சாலையும் கூட! எலும்பைச் சுற்றியுள்ள கொழுப்பு நமது இரத்தத்துக்கு வேண்டிய அணுக்களைத் தயார் செய்து அனுப்புகிறது. ஒரு நிமிடத்தில் நமது இரத்தத்திலுள்ள பதினெட்டு கோடி சிவப்பணுக்கள் அழிந்து போய் விடுகின்றன! ஒவ்வொரு நிமிடமும் இப்படி நடந்து கொண்டே இருக்கிறது. அவற்றை உடனே புதிய அணுக்களால் சரிக்கட்டியாக வேண்டும். இந்த வேலையின் பெரும்பங்கு இங்கேதான் நடக்கிறது. வெள்ளை அணுக்களும் உருவாக்கப் படுகின்றன. நமக்கு நோய் தொற்றிக் கொள்ளாமல் காப்பாற்றுவது வெள்ளை அணுதான்.

நமது உடலில் மிகப்பெரிய, அதிக வலுவுள்ள, அதிக நீளமான, எலும்பு நமது தொடை எலும்புதான். இதற்கு அபாரமான சக்தி உண்டு. ஒரு சிறு காரையே அது தாங்கி விட முடியும். நம் உடம்பில் 206 சிறிய பெரிய எலும்புகள் இருக்கின்றன. ஒரு சிலருக்குக் கொஞ்சம் கூடுதலாகவோ, கொஞ்சம் குறைவாகவோ இருக்கும். குழந்தையாக இருக்கும் போது சிறிது அதிகமாக இருக்கும். வளர வளர, அது ஒட்டிக் கொண்டு, உருவில் மறைந்து குறைந்து போகும் வாய்ப்பு உண்டு. முதுகெலும்பையே எடுத்துக் கொள்ளுங்களேன். பிறக்கும் போது 33 - அப்புறம் மெல்ல மெல்ல 13 எலும்புகள் மறைந்து விடும். மிச்சம் 20 மட்டுமே இருக்கும்!

காதில் ஒரு சிறு எலும்பு இருக்கிறது. அதுதான் நமக்குக் கேட்கும் சக்தியைக் கொடுக்கிறது. பாதத்தில் நிறைய எலும்புகள் இருக்கின்றன. அவை நம்

57–ஆம் பக்கத் தொடர்ச்சி

ளவர். இங்கு பணிகள் வளர்ச்சியடைந்து இதுவே ஒரு தனிச்சங்கமாக அமைய வேண்டும். காந்தி கிராமம் எனக் கூறுகிறோம். இது அய்யாமுத்து கிராமம் என்றாக வேண்டும். அய்யாமுத்து பெரிய மனிதர். குறியில்லாத மனிதர்கள் இல்லை. பலவீனங்களைப் பொருட்படுத்தாது திறமைகளைப் பெருமையாக எண்ண வேண்டும். எனக்கு இந்நிலையத்தைத் திறக்க வாய்ப்பை அளித்த உங்களுக்கு நன்றி. ஜெய் ஹிந்த்,

கமிஷன் தலைவரின் ஆங்கிலச் சொற்பொழிவை கோவை தெற்கு சர்வோதய சங்கத்தின் முன்னாள் செயலரும், தற்போது கதர் கமிஷன் பிரதிநிதியாக டெல்லியில் பணியாற்றி வரும் திரு. சி. வி. பிரபாகரன் தமிழாக்கம் செய்தார்.

விழாத்தலைவர் முடிவுரைக்குப் பின்னர் உடுமலைப் பேட்டை சர்வோதய சங்கச் செயலாளர் திரு. டி. சி. பழனிசாமி நன்றி கூறினார். விழா நாட்டுப் பண்ணுடன் நிறைவு பெற்றது. ●●

---

உடலை தாங்குகின்றன. இரண்டையும் இணைக்கும் எலும்புகளின் குடும்பம் ரொம்பப் பெரியது. இதில் முக்கியமானது தொடை எலும்பு. நமது உடலின் நிறையை வலது-இடது-தொடை எலும்புகள் தாம் தாங்குகின்றன. எலும்புகளைச் சதையுடன் தசை நார்கள் இணைக்கின்றன. நாம் நடக்கவும் அசையவும் முடிவது இதனால்தான்.

எலும்புகளில் இரண்டு வகை உண்டு. ஒன்று லேசாகவும் மென்மையாகவும் இருப்பது. முதுகெலும்பும், கால்களுக்கு இடையில் இருக்கும் பிறவி உறுப்பு எலும்பும் இந்த வகையைச் சேர்ந்தவைதான். தொடை எலும்பு மற்ற வகையைச் சேர்ந்தது. மிக உறுதியான கெட்டியான எலும்பு இது.

கால், கை எலும்புகள் இந்த வகையைச் சேர்ந்தவை. இரும்புக் கம்பியை விட இரும்புக் குழாய்க்கு அதிக வலுவுண்டு. இந்த எலும்புகள் அதைப் போன்ற குழாய் வகையைச் சேர்ந்தவைதான்.

பிறக்கும்போது நமது எலும்புகள் இளகித்தான் இருக்கின்றன. அதனால் கர்ப்பப் பையிலிருந்து வெளியே வருவது எளிதாக இருக்கிறது. எலும்புகளில் உள்ள கோடிக்கணக்கான 'ஆஸ்டியோ பிளாஸ்ட்' என்ற அணுக்கள், கூழ் போன்ற பொருளை வெளியிடுகின்றன. தசை நார்களுக்கு இவைதான் மெல்ல மெல்ல வலுவளிக்கின்றன. நமது கால்கள் நிற்கக் கூடிய சக்தியையும் பெறுகின்றன. பிறந்த குழந்தை பன்னிரண்டு மாதங்களுக்குப் பிறகு நிற்பதும், நடப்பதும், இந்தப் படிப்படியான வளர்ச்சியினால்தான்!

நாம் வளரும்போது எலும்பும் வளருகிறது. அதனால்தான் நமக்கு உயரமும் கூடுகிறது. எலும்புக்கு ஒரு பிரச்சனை உண்டு. அது நம் உடலைத் தாங்கும் வேலையையும் செய்ய வேண்டும். அந்த வேலையைச் செய்தபடியே வளரவும் வேண்டும்! ஓரளவு வளர்ந்த

பிறகு அவை உறுதிப்படுகின்றன. ஆனால் நீளத்திலோ உருவத்திலோ வளர்வதில்லை. அது மட்டும் அல்ல. நாம் கொடுக்கும் வேலைக்குத் தகுந்தபடி அது வலுவடைகிறது; பலவீனமடைகிறது. பளுவான இரும்பு நிறையைத் தூக்கும் பயில்வானின் தொடை எலும்புகள் அதற்கேற்ப வலுவடைகின்றன. சும்மா உட்கார்ந்து வேலை செய்பவனுக்கு அதற்கேற்ற உறுதிதான்! படுக்கையில் நாலு வாரங்கள் சேர்ந்தாற் போலப் படுத்துக் கொண்டிருக்கட்டும். அதற்கேற்றபடி ரொம்ப வலு குறைந்து போய் விடும்.

எலும்புகள் எப்படி வளர்ச்சியும் உறுதியும் பெறுகின்றன? அவற்றின் மேற்பரப்பில் மிக நுட்பமான படிவம் இருக்கிறது. இவை அதன் மீது படும் இரத்தத்திலிருந்து, கால்ஷியத்தைத் தேவைப்பட்ட அளவுக்கு உறிஞ்சி எடுத்துக் கொள்கின்றன. நம் உடம்பில் இப்படி இருக்கும் அந்தப் படிவத்தைப் பிரித்துப் பரப்பினால், நூறு ஏக்கர் அளவு இருக்கும்!

நம் உடம்பில் சுமார் இரண்டே கால் பவுண்டு கால்ஷியம் சத்து இருக்கிறது. ஆனால் அதில் மிகச் சிறு அளவு, ஓர் அவுன்ஸ் நிறையில் நாற்பதில் ஒரு பங்குதான், இரத்தத்தின் மூலம் நமது உடலைச் சுற்றி வருகிறது. இது செய்யும் வேலை அதிசயமானது. இந்த கால்ஷியம் இல்லாவிட்டால், வெளிப்படும் இரத்தம் உறையாது! காயம்பட்ட இடத்தில் இரத்தம் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும்! நரம்புகளின் வழியாக உணர்ச்சி பரவி ஓடாது. தசைகள் சுருங்கி விரியாது. இருதயம் துடிப்பது நின்றுவிடும்! அளவுக்கு அதிகமான கால்ஷியமும் ஆபத்துத்தான். சிறுநீரகத்தில் கல் தோன்றத் தொடங்கி விடும். அது சரியாக வேலை செய்யாது. இரத்தத்துக்குத் தேவையான அளவு கால்ஷியத்தை அனுப்பி வைத்து, இந்த நிலையைச் சரிக்கட்டிக் கொண்டு போகும் பொறுப்பு எலும்பைச் சேர்ந்தது.

எலும்புகளுக்கு நேரக்கூடிய முக்கியமான ஆபத்து முறிவுதான்! இது நான்கு வகையாக ஏற்படலாம். இருந்த இடத்திலேயே அப்படியே உடைந்து போகலாம். முறிந்து சதையைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்துவிடலாம். நீளவாக்கில் விரிசல் ஏற்பட்டு இருக்கலாம். நொறுங்கிப் பொடிப் பொடியாகப் போகலாம்! எலும்பு முறிவைக் கட்டுப் போட்டு மருந்து வைத்துச் சரிப்படுத்துகிறார்கள். காலப் போக்கில் இந்த ஒட்டு சேர்ந்து கொள்கிறது. சிறு குழந்தைகளுக்கு, இளைஞர்களுக்குச் சீக்கிரம் சேர்ந்து விடும். வயதானவர்களுக்கு ஆறு மாதம் வரை ஆகிறது!

இப்போது மருத்துவ சிகிச்சை முறை ரொம்ப முன்னேறி இருக்கிறது. எலும்பு நொறுங்கிப் போய் விட்டாலும், அந்த இடத்தை எஃகுத் துண்டு வைத்து இணைத்து விடுகிறார்கள். ஸ்குரு, ஆணிகள் போட்டு முடுக்கி இணைக்கிறார்கள். செயற்கை எலும்புகள், இணைப்புகளையே பொருத்தி விடுகிறார்கள்!

டாக்டர் அளிக்கும் சிகிச்சை ஓரளவுக்குத்தான். எலும்பு தன்னைத் தானே எப்படியோ சரிப்

படுத்திக் கொள்ளுகிறது. முறிந்த இடத்தில் கூர்மையாக இருக்கும் முனையைக் கொஞ்சம் கொஞ்சமாக மென்மையாக்கி இணைக்கிறது. புதிய கூழ்ப் பொருளை அதிக அளவில் உற்பத்தி செய்து, சாந்து போலப் பூசுகிறது. எலும்புக்குப் பழைய வடிவம் கொடுக்க, அதுவே ஒரு சிற்பியைப் போல, அங்கங்கே செதுக்கி, சரிப்படுத்தி, உருவத்தைச் சரிப்படுத்தி விடுகிறது!

எலும்புகளுக்கு ஏற்படக் கூடிய வியாதிகள் சிக்கலானவை. இரத்தத்துக்குப் புத்துயிர் ஊட்டும் கொழுப்பு, தனது வேலையைச் செய்யாமற் போகலாம். அப்போது தொடர்ந்து புதிய இரத்தம் கொடுக்க வேண்டும். சக்தியை இழந்த கொழுப்புக்குப் பதிலாகப் புதிய கொழுப்பை ஒட்டுச் சிகிச்சையில் அளிக்க வேண்டும்.

எலும்பு இணைப்புகள் வீங்கியும் உறைந்தும் போகலாம். இதைத்தான் 'ஆர்தரிட்டிஸ்' என்று சொல்கிறோம். அறுவை சிகிச்சை ஓரளவு இதைச் சரிப்படுத்தலாம். எலும்புகளையும் தொற்று நோய் பீடிக்கும். உடம்பின் மற்ற பகுதிகளுக்கு நேரக்கூடிய ஆபத்து - புற்று நோய் - இதற்கும் உண்டு!

எலும்புகளுக்கு இன்னொரு விநோதமான பலவீனமும் ஏற்படலாம். நமது இளமைப் பருவத்தில் எலும்புகள் மிகப்பலம் பொருந்தியவையாக இருக்கின்றன. பிறகு மெதுவாக, அவற்றின் உலோகச் சத்து, கால்ஷியம் ஆகியவை குறையத் தொடங்குகின்றன. எலும்புகள் மெல்ல மெல்ல வலுவிழக்கின்றன. உறுதியும் குறைகிறது. இதுவே ஒரு கொடிய நோயாகவும் முற்றலாம். எலும்புகள் கண்ணாடியைப்போல லேசில் உடைந்து நொறுங்கிப்போய் விடக்கூடிய அளவுக்கு லேசாகி விடக்கூடும்!

ஆண்களை விட பெண்களுக்கு இந்த வாய்ப்பு அதிகம். இதன் காரணத்தை இன்னும் ஆராய்ந்து அறிய முடியவில்லை. பெண்களுக்கு மாத விடாய் நின்று போன பிறகு, உடலில் உலோகச் சத்துக்களின் செலவு கூடிப் போகிறது. அறுபத்தைந்து வயதை எட்டிய பிறகு, முதுகெலும்பு, இடுப்பு, மணிக்கட்டு, எல்லாமே வலுவிழந்து விடுகின்றன. பளுவைத் தூக்க முடிவதில்லை. அதிக தூரம் நடக்க முடிவதில்லை. தொடர்ந்து நிற்பதில் கூட சிரமம் ஏற்பட்டு விடுகிறது.

நமக்கு வயதாகி விட்டது என்பதை நாம் உணர வேண்டும். நாற்பது வயதுக்குப் பிறகு, எலும்புகளுக்கு அளவு மீறிய வேலையையும் உழைப்பையும் கொடுக்கக் கூடாது. அதிர்ச்சி, விழுந்து விடுவது, வளைப்பது போன்ற அபாயங்களிலிருந்து காப்பாற்றிப் போற்றி வைத்துக் கொள்ள வேண்டும். குதிப்பது, ஏறுவது, கால் ஊன்றுவது இவற்றில் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். வயதானவர்களுக்கு இடுப்பிலோ, முதுகிலோ அடிபட்டால், அதன் விளைவுகள் மிகச் சிக்கலானதாக இருக்கும்.

இதற்காகப் பயப்பட வேண்டாம். அளவான தேகப்பயிற்சி, சத்து அளிக்கக்கூடிய உணவு, இவை நமது எலும்புகளைச்

> ❋ நான் ஒரு சர்வாதிகாரியாக இருந்தால் அன்னிய மொழியில் கல்வி அளிக்கும் பழக்கத்தை நமது ஆசிரியர்களும், பேராசிரியர்களும் உடனே கைவிடவேண்டும். இல்லையெனில் பதவி இழப்பர்கள் என்று உத்தரவு இடுவேன். தாய் மொழிக் கல்விக்கான பாடப் புத்தகங்கள் தயாரிக்கும் வரை கூட நான் காத்திருக்க மாட்டேன். அன்னிய மொழிக் கல்வி ஒரு பெருந் தீமை. அதை வேருடன் ஒழிக்க வேண்டும்.
>
> ● காந்தியடிகள்

சீரான நிலையில் வைத்திருக்கும். எலும்புக்கு உதவும் வைட்டமின்-டி. சத்து நமக்கு இயற்கையாக கிடைக்கிறது. நமது சருமத்தில் உள்ள எண்ணெய்ச் சத்து, சூரிய ஒளி பட்டு இந்த வைட்டமினை நமக்கு அளிக்கும் சக்தியாக ஊறி விடுகிறது. மாலை வெயிலில் நடந்து போய் வருவது உடம்புக்கு இந்த வகையில் நல்லது. எலும்புகளுக்கும் பயிற்சி கிடைக்கும். உணவில் முட்டை, மீன், மீன் எண்ணெய், பால் ஆகியவற்றில் இந்தச் சத்து கிடைக்கிறது. உணவுக்குப் பின் தாம்பூலத்தில் சுண்ணாம்புச் சேர்த்துக் கொள்வது, கால்ஷியம் உடலில் சேருவதற்குதான்!

கால்களுக்கு அசைவு கொடுங்கள். உட்கார்ந்து வேலை செய்பவர்கள், நடுநடுவில் எழுந்து நடந்து, உட்கார்ந்த நிலையை மாற்றிக் கொள்ளுங்கள். காலையிலும் மாலையிலும் நடக்கும் பயிற்சியை மேற்கொள்ளுங்கள் வீட்டில் வேலை செய்யும் பெண்கள், குனிந்து நிமிர்ந்து வேலை செய்யும் வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள். அதிக அளவு நிறையுள்ள சாமான்களைத் தூக்காதீர்கள். இவையெல்லாம் நமது எலும்புகளின் நலத்தைப் போற்றிக் கொள்ள, நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய 'டிப்ஸ்'.

நமது உடலின் பகுதிகளில் உரு மறையாமல், தேயாமல், சுருங்காமல் இருப்பது எலும்புகள் தாம். உடலின் சதையும் நரம்புகளும் மண்ணோடு கலந்து விட்ட பிறகும் எலும்புகள் இருக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனின் எலும்புக்கூடு இப்போதும் கண்டெடுக்கப்படுகிறது. சொல்லப் போனால் நமது உடம்பில் அழிவில்லாதது - நீடிப்பது என்று சொல்லக் கூடியது - ஒரு சிரஞ்சீவி நமது எலும்புகள்தாம்! ●●

*நன்றி—மணியன் மாத இதழ்*

> ❋ அன்னிய மொழிக் கல்வியால் மக்களிடையே மிளிர பிளவு ஏற்பட்டு வகுப்புக்கள் உருவாகின்றன. தாய் மொழிக் கல்வியால் வகுப்புக்கள் தகர்ந்து மக்கள் ஒன்றுகிறுர்கள்.
>
> — காந்தியடிகள்
>
> தொகுப்பு—ராஜம்மா தங்கவேல்

• *இது ஒரு அழைப்புக் கடிதம்*

# வார்தா-பவனாரில் "காதி சபை"

அன்புடையீர் !

வணக்கம். நலம். நலமே விழைகின்றேன்.

வரும் 1981 செப்டம்பர் மாதம் 11- ஆம் நாள் புனிதர் வினோபாஜியின் 86-வது பிறந்த தின விழா வருகிறது. அதையொட்டி நாட்டின் அனைத்து கதர் நிறுவனங்களின் ஒரு கதர் ஊழியர்கள் கூட்டம் செப்டம்பர் 9, 10 தேதிகளில் பவனார் ஆசிரமத்தில் கூட்டுவது என்று வினோபாஜியே அழைப்புகள் அனுப்ப ஒப்புக் கொண்டு அழைப்பு அனுப்பியிருக்கிறார்கள்.

இன்று கதர் உலகின் முன் எழுந்துள்ள பிரசினைகளை விவாதித்து, வினோபாவின் ஆசியும் பெற்று, கதர் கமிஷன், அரசு ஆகிய வளர்ச்சி நாடும் நிறுவனங்களுக்குத் தெரிவிக்க இது ஒரு நல்ல வாய்ப்பாகும். நாட்டிலுள்ள நிறுவனங்களின் கதர் பிரதிநிதிகள் கூடி வெகு நாட்கள் ஆகின்றன. எனவே இந்த மாநாடு வினோபாவின் முன்னிலையில் கூட இருப்பதால் இதற்கு மேலும் முக்கியத்துவம் அதிகரிக்கிறது. அதோடு பல பிரசினைகளுக்குத் தீர கலந்தாலோசித்து முடிவுகளும் செய்ய வேண்டியிருக்கிறது.

எனவே தயவு செய்து தாங்கள், தங்கள் நிறுவனத்தில் தங்களுக்கு முடிவுகள் செய்யத் துணைபுரியும், முக்கியமான சில ஊழியர்கள் நிர்வாகிகளையும் உடன் அழைத்து வந்து மாநாட்டில் கலந்து கொண்டு, தக்க முடிவுகள் செய்ய ஆலோசனை கூறி உதவும்படி பெரிதும் விரும்புகிறேன். நீங்கள் யார் யார் வருகிறீர்கள் என்ற விபரத்தை முதலிலேயே கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பினால் தங்களை வரவேற்கவும், தங்கும் வசதி செய்யவும் உணவுக்கு ஏற்பாடு செய்யவும் பேருதவியாயிருக்கும்.

விவரம் தெரிவிக்க வேண்டிய முகவரி:-

திரு. பால விஜய்<br>
அந்தரங்க செயலர்,<br>
வினோபா அடிகள்,<br>
ஆசிரமம், பவனார்,<br>
வார்தா. (மகாராஷ்டிரா)

மேற்குறிப்பிட்ட மாநாட்டைத் தொடர்ந்து, 11-ம் தேதி வினோபாஜியின் 86-வது பிறந்த தினம் வருகிறது. அவரது 75-வது வயதில் 79-வது வயதில் எல்லாம் அவருக்கு ஒரு கோடி ரூபாய் கிராம / சுயராஜ்யநிதி திரட்டி அனுப்பவும் அது யாவும் செலவாகி விட்டது. அவர் செலவிடவில்லை; அது பொது வேலைக்காகவே செலவிடப் பட்டுள்ளது.

இதுவே கதர் ஊழியர்கள் முதன்முறையாக அவருக்கு அவருடைய 86-வது பிறந்த தின விழாக் கொண்டாடி கைராட்டை நூல் கொண்டதோர் பரிசளிப்பு (நூல்காணிக்கை) வழங்குவது என்று முடிவு செய்து பணி புரிந்து வருகிறோம்.

நாட்டிலுள்ள அனைத்து கதர் ஊழியர்களும், நூற்பவர்களும், நெய்வோர்களும், கதர் அபிமானிகளும் குறைந்தது ஒரு சிட்டம் நூல், அதற்கு மேல் அவர் இஷ்டப்படி கொடுத்து உதவினுல் போதும். சுமார் பதின்மூன்று லட்சம் நூல் சிட்டம் வசூல் செய்து அன்பளிப்பு அளிக்கலாம்.

இதற்கு தாங்களும் தங்கள் சகாக்களும், தோழமை நூற்போர் நெய்வோர்களும் முன் வருவார்கள் என பெரிதும் நம்புகிறேன்.

நூல் நன்கொடைகளை வரும் செப்டம்பர் 7-ம் தேதியுடன் முடித்து, கணக்கு சேகரித்து, மொத்தம் சேர்ந்த தொகையை பணமாக்கி டிராப்டு மூலம் மேலே குறிப்பிட்ட முகவரிக்கு ''விநோபா 86-வது ஜயந்தி நூல் காணிக்கை'' என்று குறிப்பிட்டு கடிதத்துடன் அனுப்புவதுடன், எவ்வளவு சிட்டம் எத்தனை ரொக்கமாக்கி அனுப்பியிருக்கிறீர்கள் என்று ''தந்தியும்'' மேற்குறிப்பிட்ட முகவரிக்கு அனுப்பினுல் பேருதவியாக இருக்கும். இந்த நிதியைத் திரு. விநோபாஜியிடம் உயர்திரு. ஏ. எம். தாமஸ் அவர்கள் வழங்குவார்கள். இவ் விழாவில் தாங்களும் அவசியம் கலந்துகொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

தங்கள்,

**வெ. இராமச்சந்திரன்**

செயலாளர்,

பாரதிய காதி கிராமோத்யோக் சங்கம்

## கதர் சபைக்கு விநோபாவின் செய்தி



கதர் அன்பின் சின்னம்
கருணையின் சின்னம்
அமைதியின் சின்னம்
கதர் சேவை இக் குணங்களை
பேணி வணங்குவதாகும்.
நாம் எல்லோரும் சோந்து வாழ்வோம்
எல்லோரும் சேர்ந்து கற்போம்
சேர்ந்து உண்போம்
எல்லோரும் சேர்ந்து வீரியம்
அடைவோம்
எல்லோரும் சேர்ந்து பெறுவோம்
சாந்தி சாந்தி சாந்தி

8-8-1918
பவனர்
வார்தா

ராம் ஹரி
ஜெய் ஜெகத்

---

ஆசிரியர்: வெ. இராமச்சந்திரன், வெளியிடுபவர்: சி. துரைராசன்,
துணை ஆசிரியர்: அழகுதாசன்
தமிழ்நாடு சர்வோதய சங்கம், காதி கிராமோத்யோக் பவன்,
162, நவாப் அக்கிம் சாலை, கோவை-641 001
அச்சிடுபவர்: எஸ். மணி, கலைமணி பிரிண்டிங் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்
ஒப்பணக்கார வீதி (முதலாவது தளம்) கோவை-641 001